
CASIO
தட்டுங்கள் சுருதியை
தந்திடுமே தாளம்!!
காஸியோ இருக்கையில் நீங்கள் விரும்பிய எல்லா இசைகளையும் வாசிக்கலாம்... சுருதியை தட்டினால் போதும்.
பெற்றிடுங்கள் உங்களுக்கு பிடித்தமான பாடல்களுக்கேற்ற தாளத்தை! வாசித்திடுங்கள்... ஆடுங்கள் உங்கள் நண்பர் குழாத்துடன்.
ஆகவே வாருங்கள் வாசித்திடுங்கள் காஸியோவின் சுருதியிலே!
SA-20
• 32 மினி கீஸ் • 100 பிரிஸெட் டோன்ஸ் • 19 பிரிஸெட் ஆட்டோ ரிதம்ஸ் • 13 "லைப்ரரி அக்கம்பனிமென்ட்" பின் பல பேட்டர்ன்கள் • பிரிஸெட் டெமான்ஸ்ட்ரேஷன் ட்யூன் • இரட்டை ஸ்பீக்கர் அமைப்பு
PT-380
• 32 மினி கீஸ் • 100 பிரிஸெட் டோன்ஸ் • 12 பிரிஸெட் ஆட்டோ ரிதம்ஸ் • மினி மைக்ரோஃபோன் இணைக்கப்பட்டது • ஆர்ஜெம் பேக் கம்பேடிபிள் • மெலடி கெய்டு ஃபங்ஷன் • 5 உள்ளமைந்த சவுண்டு எஃபக்ட் பேடுகள்
CITY MUSIC CO., PTE LTD.
Singapore Tel: 3377058, 3377545
ONFLO MUSIC CO., LTD.
Hong Kong Tel: 722 4195
RAINBOW PHOTO FINISHERS PTE LTD.
Nepal, Kathmandu Tel: 221724
GENERAL ENTERPRISES COMPANY
U.A.E., Dubai Tel: 224131/2/3
MAHMOOD SALEH ABBAR CO.
Saudi Arabia, Jeddah Tel: (02)6473995
ARABIAN CAR MARKETING CO., LTD.
Oman Tel: 793741
CASIO COMPUTER CO., LTD.
Tokyo, Japan

# ஜாதி, மதம் அல்லது நிறத்தைப் பற்றி அவன் சிந்திக்கவில்லை. அவனுடைய ஒரே சிந்தனை — மற்றொருவரைக் காப்பாற்ற வேண்டும் என்பதே

**வீ**ரச் செயல்கள் புரிந்த நம் நாட்டின் இளம் குழந்தைகளை வணங்கு-கிறோம். மனித குலத்தின் மீதுள்ள அவர்களின் தன்னலமற்ற அன்பு மற்றும் அக்கறை நீடிக்கும் என்ற நம்பிக்கையில். நமது நாடு வளம்பெற, நேருஜியின் கனவை நனவாக்க...



ஒரிஸ்ஸாவைச் சேர்ந்த **மாஸ்டர் கிருபாசிந்து பிரதான்** ஏழு வயது குழந்தையை புலியின் பிடியினின்று காப்பாற்றினான்.



ஹரியனாவைச் சேர்ந்த **சந்தியா தேவி** தன் கிராமத்தினரைப் பயமுறுத்திக் கொண்டிருந்த ஒரு ஓநாயைக் கொன்றாள்.

*"சுதந்திர இந்தியா என்ற மிகச்சிறந்த மாளிகையை நாம் கட்ட வேண்டும் — எங்கே அதன் எல்லா குழந்தைகளும் வாழ முடியும்"*

**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

அவர்களின் பாதுகாப்பான எதிர்காலத்திற்காக இன்ஷ்யூர் செய்யவும்.

MAA COMMUNICATIONS-B-LIC/19A TAM

## க்ளியரெஸில் கொண்டு தினமும் ஹோம்வொர்க் செய்தால் நண்பர்களிடையேயும் ஃபர்ஸ்ட் க்ளாஸ் மதிப்பெண் பெறுவ்து மிகவும் சுலபம்.



## காரணம் க்ளியரெஸில் சருமம் எனில் அதிகத் தெளிவான சருமம்.

காலேஜில் பிரபலமாக வேண்டுமென்றால் பின்னணியில் இருந்து பிரயோசனம் இல்லை. நாலு பேருக்கிடையே தனித்து விளங்கிட உங்களுக்குத் தேவை அதிகத்தெளிவான உருவம் அதாவது க்ளியரெஸில் சருமம்.

க்ளியரெஸில் பருக்களில் மூன்று வழிகளில் ஆற்றலுடன் செயல்புரிகிறது.

ஒன்று — பருவுக்குள் ஊடுருவிச் செல்கிறது. இரண்டு — கூடுதல் எண்ணெய்ப் பசையை நீக்குகிறது. மூன்று — பருவை காயவைத்துப் போக்குகிறது.


DIFFERENT COLOUR COMBINATIONS ● THE ONLY INTERNATIONAL QUALITY ERASER IN INDIA ● PLEASANTLY SCENTED ● WATCH OUT FOR
MR CLEAN NEW 14 ROBOT ERASER SERIES ● FOOTBALL ERASER ● AVAILABLE IN 24 DIFFERENT COLOUR COMBINATIONS ●
Mr. Clean
My Little Darling,
Mr. Clean
WELCOME TO THE WONDERFUL WORLD
OF
ERASER
LOVE
HIT A CLEAN SIX
WITH CRICKET ERASER SET
SALES PROMOTIONAL & EXPORT ENQUIRIES SOLICITED
Mr. Clean
A Product Of FUN-TIME INC.
502, NIRANJAN BUILDING, 99, MARINE DRIVE,
BOMBAY-400 002. TEL: 317186, 318351, 310258
THE DOUBLE 'A' COMPANY
WATCH OUT FOR MR CLEAN NEW 14 ROBOT ERASER SERIES ● FOOTBALL ERASER ● AVAILABLE IN 24 DIFFERENT COLOUR COMBINAT IONS
THE ONLY INTERNATIONAL QUALITY ERASER IN INDIA ● PLEASANTLY SCENTED ● WATCH OUT FOR MR CLEAN NEW 14 ROBOT ERASER SERIES ● FOOTBALL ERASER ● AVAILABLE IN 24

# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி'  நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி

## விரும்பத்தகாத செயல்கள்

மத்திய அரசாங்கம் எடுத்த ஒரு முடிவை எதிர்ப்பதில் பல இளைஞர்கள் தம் உயிரை பலியாக்கி இருக்கிறார்கள்.

நம் கண்முன் ஏதாவது அநியாயம் நிகழ்ந்தால் அதனை எதிர்த்துப் போராடத்தான் வேண்டும். ஆனால் அவ்வித எதிர்ப்பு முறையானதாக இருக்க வேண்டும். அப்போது தான் அதற்கு நல்ல பலன் கிட்டும். ஒரு கொள்கையை எதிர்த்து போராடுவதில் உயிரைத் தியாகம் செய்வது என்பது முற்றிலும் வேறு விஷயம் ஆனால் தீக்குளிப்பு போன்றவற்றைச் செய்வதுதான் போராட்டம் என்றால் அது எவ்விதத்திலும் சரியல்ல. நம்நாட்டுச் சுதந்திரப் போராட்டங்களில் எவ்வளவோ பேர்கள் கலந்து கொண்டு இறந்தார்களேயொழிய உணர்ச்சிவசப்பட்டு அவர்கள் தம் உயிரை தீக்குளிப்பு போன்ற செயல்களால் பலி கொடுக்கவில்லை.

நமக்குள்ள உரிமைகள் யாவை? நமக்கு அப்பாலுள்ளவை யாவை? இவற்றை நாம் புரிந்து கொள்ள வேண்டும். கடவுள் நமக்குக் கொடுத்த உயிரை நாம் அழித்துக் கொள்ள உரிமை பெற்றவர்கள் அல்ல. இவ்விதம் செய்வது பிரச்னைகளுக்கு தீர்வு காண்பதாகவும் ஆகிவிடாது.

மதிமுகம்: 87  ஜனவரி 1991  புன்னகை: 1

தனிப்பிரதி: ரூ. 3-00  வருட சந்தா: ரூ. 36-00

A CHANDAMAMA PUBLICATION

SANKAR



புதியவை
கேம்ப்கோ
அளிக்கும்
சாக்கலேட் கொழிக்கும் எக்ளேர்கள்
புதிய கேம்ப்கோ சாக்கலேட் எக்ளேர் பேக்கைப் பிரித்ததுதான் தாமதம், பறந்து விடும் அருஞ்சுவை எக்ளேர்கள். நண்பர்கள் மத்தியில் உங்கள் புகழோ நிறைந்து விடும். உங்களது சரியான தேர்விற்குக் கிடைப்பதோ நிறைவான பாராட்டு.
கேம்ப்கோ சாக்கலேட் எக்ளேர்கள்
உன்னதமான சுவையைப் பகிர்ந்து கொள்ளுங்கள்
TOP QUALITY LOW PRICE
Chocolate Eclairs
Campco
இந்தியாவின் மிகப்பெரிய அதிநவீன ஆலை அளிப்பது
கேம்ப்கோ லிமிடெட், மங்களூர்.
R K SWAMY/CL/8356
Campco chocolates:
Milk
White
Treat
TURBO
Eclairs
TOFFEE
Assorted Gift Box
Campco beverages:
WINNER
COCOA

# நோபல் அமைதிப் பரிசு

அமைதியை நிலைநாட்ட எப்போதும் போருக்குத் தயாராக இருக்க வேண்டும் என்பது பழங்கால ரோமனியர்களின் கொள்கையாம். ஆனால் இந்தக் கொள்கை ஒருநாளும் அமைதிக்கு வழி கோலாது. போருக்குத் தயார் என்ற நிலை போருக்கு அழைத்துச் செல்லும். ஒருநாடு போருக்குத் தயாராக இருக்கிறது என்றால் அதன் அண்டைநாடுகள் எப்போது என்ன நிகழுமோ என்று பயந்து கொண்டே இருக்கும். இதனால் அவைகூட போருக்கான தயாரிப்புகளைச் செய்து கொள்ள வேண்டிய நிலைக்குத் தள்ளப்படும்.

இவ்வாறு இருநாடுகள் போருக்குத் தயாராகிவிட்டபோது ஏதாவது ஒரு சிறு சம்பவத்தாலோ அல்லது சந்தேகத்தாலோ போர் மூண்டு விடலாம். ரோமனியர் காலத்திலிருந்து இன்று வரை போர் தொடங்க இந்த முறையைத்தான் காண்கிறோம். தலைவர்கள் மூலைமுடுக்குகளில் எல்லாம் அமைதி அமைதி எனத் தொண்டை கிழியக் கத்தி சொற்பொழிவுகள் புரிவார்கள். ஆனால் இது உதட்டளவில்தான். உள்ளத்திலிருந்து அந்தரங்க சுத்தியுடன் வெளிப்படுவது அல்ல. ஏனெனில் அதேநாடு மற்ற நாடுகளுக்குப் போர்த்தளவாடங்களை விற்றுப் பொருள் சம்பாதித்துக் கொண்டிருக்கும். சொல்வது ஒன்று, செய்வது அதற்கு நேர்மாறாக என்பதுதானே அரசியல் தலைவர்களின் இயல்பு!

உள்ளத்தில் உண்மையாக அமை






தியை விரும்பாமல் மேலுக்கு உலக அமைதியைக் காப்போம் எனக் கூறுவதில் எவ்விதப் பயனும் இல்லை. அவர்கள் அந்தரங்க சுத்தியுடன் அமைதியை நம்பினுலே நல்ல பலன்கள் ஏற்படும்.

சோவியத் ரஷ்யத் தலைவர் மிகேல் கோர்ப்பசேவ் இத்திசையில் சென்று அமைதியைக் காக்க முயன்று வருகிருர். இவருக்கு முன் இருந்த கம்யூனிஸ்ட் அமைப்பு ரஷ்ய மக்களையும், அதன் அதிகாரத்திற்கு உட்பட்ட போலாந்து போன்ற நாட்டு மக்களையும் பல்வித இன்னல்களுக்கு ஆளாக்கியது. மேற்கத்திய நாடுகளோடு குறிப்பாக அமெரிக்காவுடன் அது போட்டி போட்டு பயங்கரமான ஆயுதங்களைத் தயாரிப்பதில் முனைந்தது. இப்படிச் செய்வது அவமானம் என வெளிப்படையாகத் துணிச்சலுடன் கூறியவர் கோர்ப்பச்சேவ். தனிநபர் சுதந்திரத்தையும் நாட்டின் சுதந்திரத்தையும் மதிக்க வேண்டும். ஒருவரையொருவர் தாக்காமல் பரஸ்பர ஒத்துழைப்புடன் செயல்பட வேண்டும்.

கோர்ப்பச்சேவிற்கு அமைதிக்கான நோபல் பரிசு கிடைத்திருப்பது சிறப்பானதே. இது ஒரு தனிப்பட்ட மனிதரை கௌரவிப்பது மட்டுமல்ல, அவர் கடைப்பிடிக்கும் அமைதிக் கொள்கையை உலகம் மதித்துப் பாராட்டுகிறது என்பதை எடுத்துக் காட்டவே. இது உலக அமைதிக்கு வழிகாட்டுவதாகும்.



# மூன்று கேள்விகள்

தர்மபுரத்தை ஆண்ட தர்மாங்கதனுக்கு ஆண் சந்ததியே பிறக்கவில்லை. அவனது ஒரே மகள் வத்சலா. அவன் அவளை அருமை பெருமையாக வளர்த்து எல்லாக் கலைகளையும் கற்க ஏற்பாடு செய்தான். அவள் வளர்ந்து அழகியாயும் அதிபுத்திசாலியாகவும் ஆனாள். அப்போது தர்மாங்கதனுக்கு அவளது விவாகம் பற்றிய கவலை ஏற்பட்டது. அவளை மணப்பவன் அந்நாட்டின் அரசனாவானே! எனவே அவளது அறிவுக்கு இணையாக உள்ளவனையே அவன் அவளது கணவனாகத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

ஒருநாள் அந்த மன்னனின் தர்பாருக்கு ஒரு பண்டிதர் வந்தார். அவர் தம்மைத் தாமே மன்னனுக்கு அறிமுகம் செய்து கொண்டு "அரசே! சகலசாஸ்திர விற்பன்னன் சாம்பசிவம் என்பவன் நான். என் நாடு மாளவம். காசி, தட்சசீலம் ஆகிய இரு வித்தியா பீடங்களிலும் உள்ள பண்டிதர்களை வென்று எனக்கு நிகர் யாரும் இல்லை என்று பெயர் பெற்றவன். நான் இங்கு மூன்று கேள்விகளைக் கேட்பேன். இந்த நாட்டுக் குடிமகன் யார் வேண்டுமானாலும் அவற்றிற்குப் பதில் கூறலாம். அவற்றிற்குச் சரியான விடைகளைக் கூறிவிட்டால் அப்படிக் கூறியவனிடம் இதுவரை நான் பெற்ற பதக்கங்களைக் கொடுத்து அவனை வணங்கிவிட்டுப் போய் விடுவேன். இந்த நாட்டில் என் கேள்விகளுக்கு யாருமே சரியான விடைகளைக் கூறாது போனால் உங்கள் ஆஸ்தான பண்டிதர்கள் எனக்கு மரியாதை காட்டி, பல்லக்கில் அமர்த்தி அதனைச் சுமந்து கொண்டு என்னை

-பாபநாசம் சாமா-



வழி அனுப்பி வைக்க வேண்டும். இதற்கான திறமை உங்கள் நாட்டில் இருந்தால் சொல்லுங்கள்" என்றார் மிடுக்காக.

சாம்பசிவத்தின் ஆணவப் பேச்சு பண்டிதர்களையும் மன்னனையும் அவர் பால் வெறுப்படையவே செய்தது. ஆயினும் அதனை வெளிக் காட்டாமல் மன்னன் "நீங்கள் விட்ட சவாலை நாம் ஏற்கிறோம். உங்கள் கேள்விகளுக்கான விடைகள் மூன்று நாட்களுள் கிடைக்கும். அதுவரை நீங்கள் என் விருந்தினர் விடுதியில் தங்கி இருங்கள்" எனக் கூறினான்.

சாம்பசிவமும் "சரி. என் கேள்விகளைக் கூறுகிறேன். என் முதலாவது கேள்வி இது. யாரும் இல்லை எனக் கூறும் ஒரு உண்மையைக் கூற வேண்டும். ஆனால் அது முழுக்க முழுக்கப் பொய்யாக இருக்க வேண்டும். என் இரண்டாவது கேள்வி: கேளாத ஒலியும் பாராத காட்சியும் யாவை? மூன்றாவது கேள்வி: ஆண்டி முதல் அரசன் வரை எதற்கு மிக எளிதில் அடிமை ஆகிறான்? இக்கேள்விகளுக்கே சரியான விடைகள் தேவை" எனக்கூறி அரசனது விருந்தினர் விடுதிக்குச் சென்றார்.

அக்கேள்விகளைக் கேட்டுக் கொண்டு ஆஸ்தான பண்டிதர்களும் மன்னனும் திகைத்துப் போயினர். பண்டிதர் போனதும் அவர்கள் அக்கேள்விகளுக்கான விடைகள் பற்றி விவாதிக்கலானார்கள். அவர்கள் என்னென்னவோ விடைகளைக் கூறினார்கள். ஆனால் மன்னனுக்கோ அவை எதுவும் சரியானதாகப் படவில்லை.

அவன் தன் ஆஸ்தானப் பண்டிதர்களிடம் "வந்திருக்கும் சாம்பசிவப் பண்டிதர் ஆணவம் மிக்கவராக இருக்கலாம். ஆனால் அவர் தம் கேள்விகளால் உங்களைத் திக்குமுக்காடச் செய்து விட்டார் பாருங்கள்! நீங்கள் அக்கேள்விகளுக்கு சரியான விடைகளை யோசித்துக் கொண்டு வாருங்கள்" எனக்கூறி அவர்களை அனுப்பி விட்டான்.

அதன் பிறகு மன்னன் அந்தப்புரத்திற்குச் சென்று தன் மகளின்

அறையை அடைந்தான். ஏதோ யோசித்துக் கொண்டே வந்த தன் தந்தையைப் பார்த்து வத்சலா ஆச்சரியப்பட்டாள். தர்மாங்கத னும் தர்பாரில் நடந்ததை எல் லாம் அவளிடம் கூறி "வத்சலா! நாம் இதில் தோற்றுவிடுவோமோ என்று பயமாக இருக்கிறது. ஆனல் நீ இருக்கிருயே என்ற தைரியம் எனக்கு இருக்கிறது. அதனல் நீ இக்கேள்விகளுக்கு விடைகளைச் சொல். பார்க்கலாம்" என்ருன்.

வத்சலா தன் தந்தை கூறியதைப் பொறுமையாகக் கேட்டுக் கொண்டு விட்டுச் சற்று நேரம் யோசித்தாள். பிறகு அவள் "எனக்கு விடை தெரியவில்லையே" என்ருள். அதைக்கேட்ட மன்னன் "அப்படி யானல் நமக்குத் தோல்விதான?" என்று சலித்துக் கொண்டே கூறினன்.

அப்போது வத்சலா புன்னகை புரிந்து "நான் எனக்குத்தான் விடை கள் தெரியாது என்று கூறினேன். ஆனல் சரியான விடைகள் யாரிட மிருந்து கிடைக்கும் என்பது எனக் குத் தெரியும். நம் அமைச்சரின் புதல்வர் பாஸ்கரவர்மர் இவற் றிற்கான சரியான விடைகளை நிச் சயமாகக் கூறுவார். ஏனெனில் அவர் ஒரு மாபெரும் மேதை எனப் பலர் புகழக் கேட்டிருக்கிறேன்" என்ருள்.

அதைக்கேட்ட தர்மாங்கதன் யோசனையில் ஆழ்ந்தவாறே அங்



கிருந்து சென்ருன். அவன் தன் பட் டத்து ராணியைக் கண்டு நடந் ததை எல்லாம் கூறி "நம்மகள் வத்சலாவை நான் நன்கு அறி வேன். சரியான விடைகள் தனக் குத் தெரியவில்லை என்ருல் நம் நாட்டின் மானமே போய் விடுமே என்று துடிதுடித்துப் போயிருப் பாள். தன் அறிவு கூர்மையால் நாட்டின் மானத்தைக் காக்கவே முயல்வாள். ஆனல் அப்படி ஒரு கவலையோ சிந்தனையோ அவளி டம் காணப்படவில்லை. மாருகச் சிரித்துக் கொண்டே அவள் அமைச் சரின் புதல்வன் பாஸ்கரவர்மன் இதற்கான விடைகளைக் கூறுவான் என்று உறுதியாகச் சொன்னள். இதுபற்றி நீ என்ன சொல்



கிருய்?'' என்று கேட்டான்.

ராணியும் "நான் சொல்வ தற்கு என்ன இருக்கிறது? நம் மகள் வத்சலா பாஸ்கரவர்மனைப் பற்றி நன்கு தெரிந்து வைத்திருக்கிருள் என்று தெரிகிறது. இங்கு பேச்சு அடிபடுவதைக் கொண்டு பார்த் தால் வத்சலாவும் பாஸ்கரவர்ம னும் ஒருவரை மற்றவர் மிகவும் விரும்புகிருர்கள் என்றும் தெரி கிறது. இந்தக் கேள்விகளுக்கு விடைகளைப் பாஸ்கரவர்மனிடம் நீங்கள் கேட்டுத் தெரிந்து கொள் ளுங்கள் என வத்சலா கூறியது நீங்களே நேரில் அவனது புத்தி கூர்மையைக் காண வேண்டும் என்பதற்குத்தான். இதைத்தான் நான் சொல்ல முடியும்'' என்ருள்.

தர்மாங்கதனும் "ஓ! இதுவா விஷயம்? என் மகளே எனக்குப் பரீட்சை வைக்கிருளா? சரி. இத ஞல் நான் இரண்டு விதத்தில் பயன் பெறுவேன். ஒன்று நாட் டின் மானத்தைக் காப்பது. மற்றது அலையாமல் எனக்கு மாப்பிள்ளை கிடைப்பது. இதுவும் ஒரு வகை யில் நல்லதே'' என்ருன்.

மன்னனும் பாஸ்கரவர்மனை அழைத்து வரச் சொன்னுன். அவன் நல்ல அழகன் என்றும் நல்லவித மாக நடப்பவன் என்றும் அவனது தோற்றத்தையும் நடை உடை பாவனைகளைக் கொண்டும் மன்னன் தெரிந்து கொண்டான். அவனை உட்காரச் சொல்லி மன்னன் வந் திருக்கும் பண்டிதரின் கேள்வி களைக்கூறி அவற்றிற்கு விடை அவ ஞல் சொல்ல முடியும் என்று வத் சலா கூறியதாகவும் சொன்னுள்.

அதைக்கேட்டு பாஸ்கரவர்மன் புன்னகை புரிந்து "அரசே. சாம்ப சிவம் மாபெரும் பண்டிதர் என் பதில் சந்தேகமே இல்லை. அவர் சாஸ்திரங்களையும் கற்பனைகளை யும் உண்மைகளையும் தன் மூன்று கேள்விகளில் அடக்கியுள்ளார். அவரது முதல் கேள்வி தர்க்க சாஸ்திரத்தைச் சார்ந்தது. அதற்கு விடை "எனக்கு மரணம் இல்லை" என்பதே. இது உலகறிந்த பச் சைப் பொய். கடவுளின் படைப் பில் மரணம் அடையாத ஜீவ

ராசியே கிடையாது. ஆனால் தர்க்க சாஸ்திரப்படி யாராலும் இதனை மறுக்க முடியாது. ஏனெனில் அந்த சாஸ்திரப்படி 'நான்' 'எனது' எனச் சொற்களெல்லாம் ஆத்மாவைக் குறிப்பன. ஆத்மாவிற்கு அழிவே இல்லை. எனவே சாதாரண முறையில் பார்த்தால் இது பொய். தர்க்க சாஸ்திரப்படி இது மெய்'' என்றான்.

இந்த பதிலைக் கேட்ட தர்மாங்கதன் பாஸ்கரவர்மனின் கூர் அறிவை வியந்தவாறே ''பேஷ் சரியான விடை. மற்ற இரு கேள்விகளின் விடைகளைக் கூறு பார்க்கலாம்'' என்றான். பாஸ்கரவர்மனும் ''இரண்டாவது கேள்வியில் கேட்க முடியாத ஒலி என்பது மனதில் ஏற்படும் எழுச்சி. அது சொற்களால் வெளிவருவதற்கு முன் எழும் ஒலி. பிறகே அது வாயால் கூறப்படுகிறது. அதை உணர்பவனைத் தவிர மற்றவன் அறிய மாட்டான். அதுபோலக் காண முடியாத காட்சி கற்பனை. கற்பனையில் காணும் காட்சிகளை உண்மையில் காண முடியாது. எனவே மனஉணர்வு, கற்பனை என்பனவே இரண்டாவது கேள்விக்கான பதில்'' என்றான்.

மன்னனும் ''ஆகா! சரியான விடைதான். சரி. மூன்றாவது கேள்வியின் விடை என்ன?'' என்று கேட்டான். பாஸ்கரவர்மனும்



''ஆண்டி முதல் அரசன் வரை எளிதில் வசப்படுவது புகழ்ச்சி ஒன்றினாலேயே. புகழ்ச்சியைக் கேட்டு மயங்காதவர் யார்? எனவே புகழ்ச்சியால் யாரையும் எளிதில் வசப்படுத்திவிட முடியும். இதுவே மூன்றாவது கேள்வியின் விடை'' என்றான்.

மன்னனும் ''சபாஷ். இப்போது உனக்கு ஒரு பரீட்சை. நீ காணாத ஒன்றை காண்கிறேன். அந்த காட்சி என்ன?'' என்று கேட்டான். பாஸ்கரவர்மனும் சிரித்தவாறே ''உங்கள் மகள் எனக்கு மாலையிடும் காட்சிதான் அது. இதைநானும் காண்கிறேன்'' என்றான்.

அதைக்கேட்ட மன்னன் கோபம் கொண்டவன்போல நடித்து ''நீ

மூன்று கேள்விகளுக்குச் சரியான பதிலைக் கூறிவிட்டதால் மட்டும் என் மகளை மணக்கப் போவதாகத் தீர்மானித்து விட்டாயா?'' என்று கேட்டான்.

பாஸ்கரவர்மன் சிரித்தவாறே ''உங்கள் மனதில் எங்கள் திருமணம் பற்றித் தோன்றாது இருந்திருந்தால், நான் மூன்று கேள்விகளுக்குச் சரியான விடை சொன்னதும் என்னைப் பாராட்டி இந்த விடைகள் சரியா என சாம்பசிவமே கூற வேண்டும் எனக் கூறியிருப்பீர்கள். நீங்களோ எல்லா வேலைகளையும் விட்டுவிட்டு என்னைப் புகழ்ந்ததோடு மேலும் ஒரு பரீட்சை வைத்தீர்கள். எதற்கு என்பதை நான் சொல்லவும் வேண்டுமா?'' என்றான்.

தர்மாங்கதனும் ''ஆகா! இப்படித் தீர்மானமாக எதையும் சொல்லும் நீ என் மகளுக்கு ஏற்றவனே. நாம் இருவரும் கண்ட காட்சியை விரைவிலேயே உண்மையாக்கி விடுகிறேன்'' என்றான்.

மன்னன் உடனேயே தர்பாரைக் கூட்டினான். அதில் வத்சலாவும், ராணியும் பாஸ்கரவர்மனும் அங்கு சென்றனர். பண்டிதர் சாம்பசிவமும் விரைவில் வந்து சேர்ந்தார். அந்த நிறைந்த சபையில் பாஸ்கரவர்மன் அந்தப் பண்டிதரின் மூன்று கேள்விகளுக்கும் தன் விடைகளைக் கூறினான். சாம்பசிவமும் அந்த விடைகள் சரியானவையே என்று கூறி பாஸ்கரவர்மனை மரியாதையுடன் வணங்கினார். தன் பதக்கங்களை எல்லாம் எடுத்து அவர் அவனிடம் கொடுத்தார். முடிவில் தான் அணிந்திருந்த மாலையைக் கழற்றி அவன் கழுத்தில் அணிவித்தார்.

அடுத்த நல்முகூர்த்தத்திலேயே வத்சலா மணமாலையை பாஸ்கரவர்மன் கழுத்தில் அணிவிக்க, தர்மாங்கதனும் அவன் மனைவியும் ஆனந்தக் கண்ணீர் வடித்தார்கள்.





# கொள்ளைக்கார இளவரசன்

**16**

*[வீரசிம்மனின் கட்டளைப்படி சர்ப்பதந்தன் விஜயபுர மன்னன் சங்கரவர்மனிட மிருந்து அம்பாள் தங்க விக்கிரகத்தைக் கவர்ந்து வந்தான். ஆனால் இளவரசன் தீபன் அந்த விக்கிரகத்தை சர்ப்பதந்தனின் வீரர்களிடமிருந்து பிடுங்கி வந்து சங்கரவர்ம னிடமே அதனை ஒப்படைத்தான். அதன் பிறகு-]*

படகிலிருந்து தங்க விக்கிரகம் மாயமாய் மறைந்து விட்டது கேட்டு வீரசிம்மன் சற்று நேரம் யோசித்தான். பிறகு அவன் கோபத்தோடு "மாயமாம்! மந்திரமாம்!! இதெற்கெல்லாமா நாம் பயந்து விடுவோம்? நம்மால் எதுவும் செய்ய முடியாதா? நம் படை எதற்கு உள்ளது? சேனாதிபதி இருப்பது வீண்?" என்று கேட்டான்.

சர்ப்பதந்தனும் "நம்படை வலிமை மிக்கதே. ஆனால் நமக்கும் மேல்பட்ட சக்தி செயல்படும்போது நம்மால் என்ன செய்ய முடியும்? காட்டில் திடீரென மிருகங்கள் ஒரே சமயத்தில் நம் படைகளைத் தாக்கி விரட்டியது எப்படி? அற்புத சக்தியால்தானே! அதைத் தாங்களே நேரில் கண்டீர்களே" என்றான்.



ளது. புதிதாக நிர்மாணிக்கப்பட்ட ஆலயத்தில் நாளை அதனைப் பிர திஷ்டை செய்யப் போகிறார்கள்'' என்றான்.

அது கேட்டு உற்சாகத்துடன் வீரசிம்மன் "அப்படியா? இது உண்மைதானா?'' என்று கேட்டான். ஒற்றர் தலைவனும் "ஆம் முற்றிலும் உண்மையே'' என்று கூறினான். அப்போது வீரசிம்மன் "ஓ! அந்த சங்கரவர்மன்தான் யாரோ ஒரு மந்திரவாதியின் உதவியோடு தங்க விக்கிரகத்தைக் கவரச் செய்தானா? அவனுக்குச் சரியான பாடம் கற்பிக்க வேண்டும். நாமே சென்று அதனை எடுத்து வருவோம். இதற்கு பத்து பதினைந்து வீரர்கள் மட்டும் என்னோடு வந்தால் போதும் அதற்கான ஏற்பாட்டைச் செய்'' என்று கட்டளை இட்டான்.

ஜெயபுரத்து மக்கள் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கி இருந்தனர். இளவரசன் தீபன் தான் விக்கிரகத்தை மீட்டு வந்து கொடுத்தான் என்பதை மன்னன் சங்கரவர்மன் யாரிடமும் கூறவில்லை. எனவே மக்கள் ஏதோ மந்திர சக்தியால்தான் விக்கிரகம் மீண்டும் தங்களுக்கு கிடைத்திருக்கிறது என்று நம்பினார்கள். விக்கிரகப் பிரதிஷ்டையைக் காண ஏராளமான மக்கள் கூடினார்கள்.

இளவரசி சுகன்யாவோ விக்

இதற்குச்சட்டென வீரசிம்மனால் பதில் கூற முடியவில்லை. ஆயினும் சற்று சமாளித்தவாறே "சரி சரி, நடந்தது நடந்து விட்டது. இப்போது அந்தத் தங்க விக்கிரகம் எங்கே? அதைக் கண்டு பிடித்தாக வேண்டும். தங்க விக்கிரகம் நம் கையை விட்டுப் போனது நமக்குப் பெருத்த அவமானமே'' என்றான்.

இச் சமயத்தில் ஒற்றர் தலைவன் அங்கு வந்து வீரசிம்மனைப் பணிவுடன் வணங்கினான் வீரசிம்மனும் அவனிடம் "என்ன விஷயம்?'' என்று கேட்கவே அவனும் "மகாராஜா! நம் வீரர்களிடமிருந்து மாயமாய் மறைந்த தங்க விக்கிரகம் தற்போது சங்கரவர்மனிடம் உள்

கிரகத்தை விட்டு அகலாமல் அதன் பக்கத்திலேயே உட்கார்ந்திருந் தாள். மக்கள் அம்பாளின் விக்கிர கத்தையும் அதனருகே உட்கார்ந் திருக்கும் இளவரசியையும் கண்டு மகிழ்ந்தனர்.

விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்ய முகூர்த்த வேளை நெருங்கி விட்டது. மங்கள வாத்தியங்கள் முழங்கிக் கொண்டிருந்தன. வேத மந்திரங்கள் கணீரென்ற குரல்களில் ஒலித்தன. அரண்மனையிலிருந்து மன்னனும், இளவரசி சுகன்யா வும் அர்ச்சகரும் அம்பாளின் விக் கிரகத்தைச் சுமந்து கொண்டு புதி தாக நிர்மாணிக்கப்பட்ட ஆல யத்தை நோக்கிச் சென்று கொண் டிருந்தார்கள்.

அப்போது திடீரென "நில்லுங் கள்" என்று உரக்கக் கத்திய வாறே குதிரை மீது அமர்ந்த வீர சிம்மன் அங்கு வந்தான். அவ னோடு பத்துக் குதிரை வீரர்கள் வந்தது கண்டு மேளதாளங்கள் நின்று போயின.

வீரசிம்மனை அடுத்து சர்ப்பதந் தனும் மேலும் சில வீரர்களும் இருந்தனர். வீரசிம்மனும் "சங்கர வர்மா! நீ போரை விரும்ப மாட் டாய் என்றே நினைக்கிறேன். நீ இப்போதே தங்க விக்கிரகத்தை எனக்குக் கொடுத்து விட்டால் உன் நாட்டின் அமைதிக்குப் பங் கம் விளைவிக்காமல் நான் போய்



விடுகிறேன்" என்றான்.

அப்போது இளவரசி சுகன்யா "அது மட்டும் முடியாது" என்று கண்டிப்பான குரலில் கூறி அம் பாளின் விக்கிரகத்தை கெட்டி யாகப் பிடித்துக் கொண்டாள். அப்போது வீரசிம்மன் அவளைப் பார்த்து பிரமித்துப் போனான் அவன் சங்கரவர்மனிடம் "யார் இந்த அழகான பெண்?" என்று கேட்டான்.

சங்கரவர்மனும் "இவள் என் மகள் சுகன்யா. அவள் அம்பாள் விக்கிரகத்தின் மீது உயிரையே வைத்திருக்கிறாள்" என்றான் அப் போது வீரசிம்மன் தன் குதிரை யிலிருந்து கீழே இறங்கி "ஓ! இவள் உன் ஒரே மகள் சுகன்யாவா?



தங்க விக்கிரகம் போல இருக்கிறாள். எனக்கு அம்பாளின் தங்க விக்கிரகம் வேண்டாம். தங்கச் சிலை போலுள்ள உன் பெண்ணைக் கொடு'' என்று சங்கரவர்மனிடம் கூறினான்.

சங்கரவர்மனோ ''அடே வீர சிம்மா! நீ சுய நினைவுடன்தான் பேசுகிறாயா?'' எனக் கோபத்தோடு கேட்டான். வீரசிம்மனும் ''நீ என் சிற்றரசன். என்னிடம் மரியாதையுடன் பேச வேண்டும். தெரிந்ததா?'' என்றான். சங்கரவர்மனும் ''மரியாதையா? நிலை தடுமாறி உளறும் உனக்கா மரியாதை?'' என்று கேட்டான்.

வீரசிம்மனும் ''ஆம். எனக்குத்தான். நான் உன் மகளை மணக்கப் போகிறவன். மேலும் நான் சக்கரவர்த்தி. நீயோ என் சிற்றரசன். எனக்கு அடங்கிப் போக வேண்டியவன் நீ இதையெல்லாம் நினையாமல் பேசினால் உனக்கும் உன் நாட்டிற்கும் என்ன நேரிடும் தெரியுமா?'' என்று மிரட்டினான்.

சங்கரவர்மனோ ''வீரசிம்மா? நீ மிரட்டி விட்டால் நான் பணிந்து போவேனா? எனக்கு சுய கௌரவம் உள்ளது. அதனைக்காக்க நான் எந்தத் தியாகத்தையும் புரியத் தயார்'' என்று பதில் கூறினான்.

வீரசிம்மனும் ''சங்கரவர்மா! சக்கரவர்த்தியான நான் உன் மகளை மணப்பதால் உன் அந்தஸ்தும் கௌரவமும் உயரத்தான் செய்யும். நீ மட்டும் உன் மகளை எனக்கு விவாகம் செய்து வைத்தால் உன் நாடு பிழைக்கும். நீ எனக்கு அம்பாளின் தங்க விக்கிரகத்தையும் கொடுக்க வேண்டியதும் இல்லை. ஆனால் நீ மட்டும் என் விருப்பத்தை நிறைவேற்ற மறுத்தால் உனக்கு உன் நாடு தக்காது. உன் தங்க விக்கிரகம் உன்னிடம் இராது. உன் மகளும் உன்னோடு வாழ மாட்டாள். இவை மூன்றும் என் வசமாகி விடும். தெரிந்ததா?'' என்றான்.

சங்கரவர்மன் வீரசிம்மனைச் சுட்டு எரித்து விடுபவன் போலப் பார்த்தான். அப்போது இளவரசி

சுகன்யா "அப்பா! அவரது விருப்பத்தை நிறைவேற்றுவதாகக் கூறி விடுங்கள். இந்த விக்கிரகத்தை இவர் உங்களிடம் விட்டு வைப்பதானல் நான் இவரை மணம் புரிந்து கொள்கிறேன்" என்ருள்.

வீரசிம்மனும் "சபாஷ்! நீதான் புத்திசாலி. உள்ள நிலைமையை நன்கு புரிந்து கொண்டு செயல்படுகிருய்" என்ருன். சங்கரவர்மனே "நிலைமையா? அது எப்படி மாறிவிட்டது?" என்று கோபத்தோடு கேட்டான்.

அப்போது இளைஞனுக உள்ள ஒரு வியாபாரி சுகன்யாவை அணுகி அவளிடம் ஏதோ இரகசியத்தை கூறிவிட்டு சங்கரவர்மனைப் பார்த்தான். அந்த இளைஞன் இளவரசன் தீபனே என சங்கரவர்மன் புரிந்து கொண்டான். அவன் மனம் சந்தோஷமும் நிம்மதியும் அடைந்தது.

அவன் சுகன்யாவைப் பார்த்து "நீ இதை உன் முழுமனதுடன் சொல்கிருயா?" என்று கேட்டான். சுகன்யாவும் "ஆமாம் அப்பா! உங்களுக்கு இதில் எள்ளளவும் சந்தேகம் வேண்டாம். நான் விரும்புவது எல்லாம் இந்த அம்பாளின் விக்கிரகம் உங்களிடம் இருக்க வேண்டும் என்பதே. என் காரணமாகப் போர் ஏற்பட்டுப் பலர் மடிவதை நான்



விரும்பவில்லை. நாம் இவரது விருப்பத்திற்கு இணங்காவிட்டால் இவர்நம்மை விட்டு விடுவாரா? மேலும் இவர் சக்கரவர்த்தி. இளம் வயதினர். எனவே இவரை மணந்து கொள்ள எனக்கு எவ்வித ஆட்சேபமும் இல்லை" என்ருள்.

வீரசிம்மனே மகிழ்ச்சி ததும்ப "ஆகா! சரியாகச் சொன்னுய். இனியும் உன் தந்தைக்கு என்ன ஆட்சேபம் இருக்க போகிறது?" என்ருன். சங்கரவர்மனும் தன் மகள் கூறியதை ஏற்பதாகத் தலையை ஆட்டினன்.

அப்போதே சங்கரவர்மன் தன் மகளை வீரசிம்மனேடு அனுப்ப ஏற்பாடுகளைச் செய்யலானன்.



சுகன்யா பட்டாடைகள் உடுத்தி நகைகளை அணிந்து கொண்டு மணப்பெண் போல விளங்கினாள். ஒரு யானை நன்கு அலங்கரிக்கப்பட்டு கொண்டு வரப்பட்டது. சுகன்யா தன் தோழி ஒருத்தியுடன் யானையின் அம்பாரியில் அமர்ந்து கொண்டாள். யானை முன் செல்ல அதன் பின் வீரசிம்மனும் அவனது வீரர்களும் சென்றார்கள்.

அவர்கள் ஜெயபுரத்திலிருந்து கிளம்பி அதனை அடுத்த காட்டின் வழியே சென்று கொண்டிருந்தார்கள். அப்போது ஜெயானந்த முனிவரின் கிளி மல்லி பறந்து வந்து யாருக்கும் தெரியாமல் ஒரு கடிதத்தை சுகன்யாவிடம் கொடுத்து விட்டுப் போயிற்று. சுகன்யா அதைப் படித்து விட்டுத்தன் தோழியின் காதில் ஏதோ சொன்னாள். பிறகு அவள் தன் கண்களை மூடிக் கொண்டு மயக்கம் அடைந்தவள் போல அத்தோழியின் மடியில் சாய்ந்து விட்டாள்.

தோழியும் "ஐயோ! இளவரசி மயக்கம் போட்டு விழுந்து விட்டாளே!" என்று கத்தினாள். மறு நிமிடம் யானை நின்றது. வீரசிம்மனும் மற்றவர்களும் நின்றனர். வீரசிம்மன் உடனேயே இளவரசியைக் கீழே இறக்கி விடும்படிக் கட்டளை இட்டான் வைத்தியர்களை அழைத்து வர ஜெயபுரத்திற்குத் தன் வீரன் ஒருவனை அனுப்பினாள்.

ஜெயபுர ஆஸ்தான வைத்தியர் இரு உதவியாளர்களோடு உடனேயே இளவரசி இருந்த இடத்திற்கு வந்து சேர்ந்தார். அவர்கள் மூவரும் இளவரசி தங்கி இருந்த கூடாரத்திற்குள் போய் விட்டுச் சற்று நேரமான பின் அதனின்றும் வெளியே வந்தார்கள்.

அவர்கள் வீரசிம்மனிடம் "மகராஜா! இளவரசியின் மயக்கம் சற்று நேரத்தில் தெளிந்து விடும். ஆனால் அவள் மிகவும் பலவீனமாக இருப்பதால் அவள் ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டும். உடனேயே பயணத்தைத் தொடரக்

கூடாது. ஐந்து நாழிகை கழிந்த பின் அவளை யானைமீது ஏற்ருமல் ஒரு பல்லக்கில் வைத்து சுமந்து செல்ல வேண்டும்'' என்று கூறி விட்டுத் தம் உதவியாளர்களுடன் ஜெயபுரத்திற்குத் திரும்பிச் சென் ருர்.

ஜெயபுரத்திலிருந்து தான் பல் லக்கு வர வேண்டும். அதை வர வழைக்கச் சற்றுத் தாமதமாகியது. அது சுக்ன்யா இருக்கும் இடத்தை அடைந்த போது மாலையாகி விட் டது. அப்போது வீரசிம்மன் சுகன் யாவின் தோழியிடம் ''இளவரசி இப்போது புறப்படும் நிலையில் இருக்கிருளா?'' என்று கேட்டான்.

தோழியும் ''இளவரசியார் உள்ளே ஒய்வு எடுத்துக் கொண் டிருக்கிருர். நீங்களே போய்க் கேளுங்கள்'' என்ருள். வீரசிம்ம னும் மகிழ்ந்து போய் கூடாரத்திற் குள் சென்ருன். அவன் மெது வாகக் கனைத்தவாறே ''இளவரசி!'' என்று கூப்பிட்டான். ஆனல் அவ னுக்கு பதில் எதுவும் கிடைக்க வில்லை.

அவன் மெதுவாகப் படுக்கையை அணுகினன். கூடாரத்தில் மங்கிய ஒளி இருந்தது. படுக்கை மீது பட் டுத் துணி பளபளவென இருந் தது. அது அசைந்ததால் சுகன்யா தான் அங்கு படுத்திருக்கிருள் என நினைத்தான். எனவே அந்தப் பட் டுத் துணியில் கை போன்ற பகு தியை தடவிப் பிடித்து ''இளவ ரசி!'' எனக் குரல் கொடுத்தான்.

மறுநிமிடம் அந்தப் பட்டுத் துணியை விலக்கிக் கொண்டு ஒரு குரங்குக் குட்டி தாவி வந்து வீர சிம்மனின் தோளின் மீது உட் கார்ந்தது, எப்படி இது? மாயமா மந்திரமா என்று அவன் திகைத்த போது அந்தக் குரங்குக்குட்டி அவனது முகத்தைப் பல இடங் களில் கீறிவிட்டு ஓடியது. வீரசிம் மன் ''பிடியுங்கள் அந்தக் குரங்குக் குட்டியை'' என்று கத்தினன்.

(தொடரும்)






# கனகாங்கியின் மனம்

**த**ன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்தது "மன்னனே! நீ உன் நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ள முரட்டுப் பிடிவாதம் பிடிப்பது போலத் தெரிகிறது. இதுபோலத் தன் எண்ணம் நிறைவேற முரட்டுப் பிடிவாதம் பிடித்து முடிவில் அதைக் கைவிட்ட அரசகுமாரி கனகாங்கியின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று கூறி கதை சொல்ல ஆரம்பித்தது.

மலையகிரியை மந்திரசேனன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனது மகன் இந்திரசேனன்

வேதாளம் சொல்லும் கதை



எல்லாக் கலைகளையும் கற்று சிறந்த வனுயும் அழகாயும் இருந்தான். இதனல் அவனுக்கு தன் மகளைக் கொடுத்து மணம் செய்து வைக்கப் பல மன்னர்கள் துடித்துக் கொண்டிருந்தார்கள் அப்படிப் பட்டவர்களில் சந்தனபுர மன்னன் சண்டமாருதனும் ஒருவன்.

சண்டமாருதனின் ஒரே மகள் கனகாங்கி. அவளை சந்திரசேனனுக்கு மணம் செய்து வைக்கச் சண்டமாருதன் எண்ணினன். மந்திரசேனன் அவனது நண்பனும் கூட. அதனல் பேசி ஒரு முடிவிற்கு வர அவன் தீர்மானித்தான்.

கனகாங்கியும் இந்திரசேனனைப் பற்றித் தன் தோழிகள் வாயிலாகக் கேட்டிருந்தாள். அவளும் மணந்தால் இந்திரசேனனையே மணப்பது என்று தீர்மானித்துக் கொண்டாள். தன் தந்தையும் அதையே விரும்புவது கண்டு அவள் தன் எண்ணம் நிறைவேறி விடும் என எண்ணி மகிழ்ந்தாள்.

சண்டமாருதன் மந்திரசேனனைச் சந்தித்து "நான் இந்திரசேனனை என் மாப்பிள்ளையாக்கிக் கொள்ள விரும்புகிறேன். இது வரை நாம் நண்பர்களாக மட்டுமே இருந்தோம். இனி சம்மந்திகளாகி விடுவோம்" என்றுன். அதைக் கேட்ட மந்திரசேனன் "ஆகா! எனக்கு சம்மதமே. என் மகனை கூப்பிட்டு அவன் அபிப்பிராயத்தையும் கேட்கிறேன்" எனக்கூறி ஒரு பணியாளிடம் உடனே இந்திரசேனனை அழைத்து வரச் சொன்னுன்.

மந்திரசேனன் அவனிடம் சண்டமாருதன் கூறியதைச் சொன்னுன். இந்திரசேனனே "என்னை மன்னியுங்கள். நான் இந்தத் திருமணத்திற்கு இசைய மாட்டேன். நான் சாளுவ மன்னர் மகள் சமுத்திரிகாவையே மணக்க விரும்புகிறேன்" என்றுன்.

அதைக் கேட்டு மந்திரசேனன் "சரி. உன் இஷ்டம். திருமணம் என்பது உன் வாழ்க்கையோடு சம்மந்தப்பட்டது. நண்பர்களான நாங்கள் சம்மந்திகளாகவும் ஆகி விடலாம் என்று எண்ணினேம்.

ஆனுல் கடவுளின் சித்தம் வேறு விதமாக உள்ளது. அதை நம்மால் மாற்ற முடியாது" என்ருன்.

அப்போது சண்டமாருதன் குறுக்கிட்டு "இந்திரசேனு! என் மகள் உன்னேயே மனதார விரும்பு கிருள். அவளே நீ வேண்டாம் எனப் புறக்கணிக்காதே" என் ருன். இந்திரசேனனே "நான் மணந் தால் சமுத்திரிகாவைத்தான் மணப்பேன். அதனுல் உங்கள் மகளே மணம் செய்து கொள்ள மாட்டேன்" என்று 'பட்'டென்று கூறிவிட்டான்.

அப்போது சண்டமாருதன் மந்திரசேனனிடம் "நீ நல்லவித மாக எடுத்துக் கூறி இந்தத் திரு மணத்திற்கு சம்மதிக்கவை" என் ருன். மந்திரசேனனே "விவாக விஷயத்தில் அவனே நான் நிர் பந்திப்பது சரியல்ல" என்ருன்.

அப்போது சண்டமாருதன் "சரி, சமுத்திரிகாவை மணந்து கொள்வதோடு அவன் என் மக ளேயும் மணந்து கொள்ளட்டுமே" என்ருன். அதற்கு இந்திரசேனனே "எங்கள் வம்சத்தில் எல்லோ ருமே ஏகபத்தினி விரதத்தை அனுஷ் டிப்பவர்கள். எனவே நீங்கள் கூறு கிறபடி நடக்காது" என்ருன்.

அதைக் கேட்ட சண்டமாருதன் கோபம் கொண்டு "நான் சொல் கிறபடி நடக்காவிட்டால் நீங்கள் பயங்கர விளேவுகளேத் தான் எதிர்



நோக்க வேண்டிவரும்" எனக் கூறி விட்டுத் தன் நாட்டிற்குக் கிளம்பிப் போய் விட்டான். அதற்கு ஒரு வாரத்திற்குப்பின் மலேயகிரி மீது போர் தொடுப்ப தாக அவன் அறிவித்தான்.

மந்திர சேனனுக்கு இது மிகுந்த வருத்தத்தையே அளித்தது. வேறு வழியின்றி அவனும் போருக்கான ஏற்பாடுகளேச் செய்யலானுன். அப்போது இந்திரசேனன் "தந் தையே! இந்த போருக்கு நான் தானே காரணம். எனவே நானே படைகளுக்கு தலேமை தாங்கிப் போர்க்களத்திற்குச் செல்கிறேன். சண்டமாருதனுக்கு அப்போது தான் என் வலிமை எவ்வளவு என்பது தெரியும்" என்ருன்.

சந்தனபுரத்தில் கனகாங்கிக்கும் தன் தந்தை மலையகிரிமீது படை எடுத்துப் போவது கொஞ்சமும் பிடிக்கவில்லை. தன் திருமணத்திற்காக இருநாட்டு வீரர்கள் உயிர் விடுவதை அவள் விரும்பவில்லை. அவள் நன்கு யோசித்துவிட்டு தன் தந்தையிடம் "தந்தையே! நானும் போர்க் கலையை நன்கு கற்றவள். எனவே நான் ஆண் வேடம் அணிந்து போர்புரிய செல்கிறேன். ஆனால் நம் படைகள் எதிரியின் படைகளோடு மோதவேண்டாம். நான் மட்டும் இந்திரசேனனோடு போரிட்டு வெல்கிறேன். பிறகு சமாதான ஒப்பந்தம் செய்யும் போது அவன் நாட்டை அவனுக்குத் திருப்பி கொடுத்து என்னை அவருக்கு மணம் செய்து வைத்துவிடுங்கள்" என்றாள். சண்டமாருதனும் அந்த யோசனையை ஏற்றான்.

கனகாங்கியும் இந்திரசேனனோடு போர்புரிய விசேஷ சக்தி பெறவேண்டும் என நினைத்து குதிரை மீது ஏறி காட்டுக்குள் சென்றாள். அங்குள்ள மகாநந்தர் என்ற யோகியைக் கண்டு தன் பிரச்சினையை கூறினாள். அவரும் "பெண்ணே! உனக்கு ஒரு மந்திரத்தை உபதேசிக்கிறேன். நீ போர் புரியும் போது உன் வாளுக்கு அபூர்வ சக்தி வேண்டுமென நினைத்து அதை உச்சரி. அந்த வாளுக்கு அந்த ஒரு வினாடி நேரத்திற்கு அந்த சக்தி இருக்கும். அந்த ஒரு வினாடிக்குள் நீ எப்படிப்பட்ட பலசாலியான எதிரியையும் தோற்கடித்து விடலாம். ஆனால் இது



உனக்கு ஒரு முறைதான் பயன் படும்'' என்று கூறி அனுப்பினர்.

சண்டமாருதன் தன் தரப்பில் இருந்து ஒரு வீரன் இந்திரசேன னுடன் சண்டை இட போவதாயும் அதில் யார் வெற்றி பெறுகிருனே அத்தரப்பு மன்னனே வென்றவன் எனக் கொள்ள வேண்டும் என்று சொல்லி அனுப்பினன். மந்திர சேனனும் அதற்குச் சம்மதித்தான். அதற்குக் காரணம் வீணுக உயிர் சேதம் ஏற்படுவதைத் தவிர்க்க அவன் விரும்பியதே.

போர்க்களத்திற்கு ஆண் வேடத் தில் கனகாங்கி வந்தாள். இந்திர சேனனும் தயாராக அங்கு இருந் தான். இருவரிடையே வாள் போர் மூண்டது. இந்திரசேனனின் தாக் குதலை கனகாங்கியால் வெகு நேரம் சமாளிக்க முடியவில்லை. அப்போது அவள் தனக்கு மகா நந்தர் உபதேசித்த மந்திரத்தை உச்சரித்தாள். அடுத்த வினடி அவள் பிடித்திருந்த வாளில் மின்னல் போன்ற ஒளி வீசியது. உடனே அவள் தன் வாளால் இந்திரசேனனின் வாளை தட்டி விட்டாள். அது சற்று தூரத்தில் போய் விழுந்தது. இந்திரசேன னுக்கு அது எப்படி நிகழ்ந்தது என்றே புரியவில்லை.

சண்டமாருதன் இந்திரசேனனை சிறைபிடித்துத் தன் நாட்டிற்குக் கொண்டு சென்றுன். மறுநாள் அவன் இந்திரசேனனிடம் "நீ தோற்று விட்டாய். நீ தோற்றது ஆண் வேடத்தில் உன்னேடு வாள் போர் புரிந்த என் மகள் கனகாங்கி





யிடம்தான். நீ மட்டும் என் மாப்பிள்ளையாகச் சம்மதித்தால் அவளோடு என் நாட்டையும் உனக்கே கொடுக்கிறேன். என்ன சொல்கிறாய்?'' என்று கேட்டன்.

இந்திரசேனனும் ''என்னை மன்னியுங்கள் மகாராஜா. திருமண விஷயமாக என்னுடைய முடிவு முன்பு நான் கூறியதேதான். அதில் எள்ளளவும் மாற்றம் இல்லை'' என்றான். இது கனகாங்கிக்கு அவளது தந்தையின் வாயிலாக தெரிந்தது. அதைக் கேட்ட அவள் மனம் வாடிப்போயிற்று.

சண்டமாருதன் இந்திரசேனனை சிறைபிடித்தான் என்ற செய்தி சமுத்திரிகாவின் தந்தையான சாளுவ மன்னனுக்கு தெரிந்தது. அவன் கோபம் கொண்டு சந்தனபுரி மீது படையெடுப்பதாக அறிவித்தான். அதை அறிந்த சண்டமாருதன் தன் மகளிடம் ''கவலைப்படாதே. இந்த சாளுவ மன்னனின் மிரட்டலுக்கு பயப்படமாட்டேன். நம் படைமுன் அவன் படை நிற்க முடியாது. அவன் தோற்று ஓடுவது உறுதி'' என்றான்.

கனகாங்கி அதுபற்றி நன்கு யோசித்துப் பார்த்தாள். முடிவில் அவள் தன் தந்தையிடம் ''அப்பா! என் மனதை நான் மாற்றிக் கொண்டு விட்டேன். இந்திரசேனனுக்கும் சமுத்திரிகாவுக்கும் நானே முன்னிருந்து திருமணம் செய்து வைப்பது என்று தீர்மானித்து விட்டேன்'' என்றாள்.

சண்டமாருதனும் மந்திரசேனனுக்கு ஒரு கடிதம் எழுதினான். அதில் ''என் மகள் ஒரு யோகி அருளிய மந்திரத்தின் உதவியால் உன் மகனை வாள் போரில் வென்றாள். அவள் தன் வலிமையால் வெற்றி பெறவில்லை. அதனால் இந்திரசேனன் தோற்றுப் போனான் எனக் கூறமுடியாது. அதனால் உன் நாட்டை உனக்கே தந்து உன் மகனையும் விடுதலை செய்கிறேன்'' என்று இருந்தது.

அதன் பிறகு கனகாங்கியே முன் நின்று சமுத்திரிகாவுக்கும் இந்திரசேனனுக்கும் விவாகத்தை நடத்தி வைத்தாள்.

வேதாளம் இந்தக் கதையைச் சொல்லி "கனகாங்கி இந்திர சேனனை மிகவும் விரும்பினுள் என்பதில் சந்தேகமே இல்லை. ஆனுல் இந்திரசேனன் அவளை மணக்க ஒப்பவில்லை. ஆனுல் கனகாங்கி அவனையே மணக்க வேண்டும் என்ற பிடிவாதத்தோடு யோகி மகாநந்தரைக் கண்டு, அவரிடம் மந்திரோபதேசம் பெற்று அதைக் கொண்டு இந்திரசேனனைத் தோற்கடித்தாள். அப்போதும் அவன் கனகாங்கியை மணக்க முடியாது என்றே கூறினுன். இதனுல் கனகாங்கி அவனைப் பழி வாங்காமல் அவன் விரும்பிய சமுத்திரிகாவையே அவனுக்கு மணம் செய்து வைத்தாளே . இது ஏன்? இப்படி அவள் செய்தது சரியா? இக்கேள்விகளுக்கு சரியான விடைகள் தெரிந்திருந்தும் நீ கூருவிட்டால் உன் தலை வெடித்து சுக்குநூருகி விடும்" என்றது.

விக்கிரமனும் "கனகாங்கியின் இயல்பே சமாதானத்தை விரும்புவது. அவள் இந்திரசேனனுடன் வாள்போர் புரிந்தது பல உயிர்கள் வீணுகப் போவதை தடுக்கவே தான். ஆனுல் அவளால் இந்திர சேனனை மறக்க முடியாது போனதாலேயே யோகியின் உதவியை அவள் நாடினுள். நாட்டை இழந்த பிறகும் இந்திரசேனன் சமுத்திரிகாவையே மணப்பதாக கூறி உறுதியுடன் இருந்தது கண்டு அவள் அவனது காதல் எப்படிப் பட்டது என்பதை உணர்ந்தாள். பெண்களுக்கே உரிய பெருமை, தியாகம் ஆகிய குணங்கள் அவளிடம் தலைதூக்கின. அதனுல்தான் அவளே சமுத்திரிகாவுக்கும் இந்திர சேனனுக்கும் விவாகத்தை நடத்தி வைத்தாள்" என்ருன்.

விக்கிரமனின் சரியான இந்தி பதிலாள் அவனது மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப்போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக்கொண்டது.



# எப்படி அவன் அறிவு!

சிவப்பாவிற்குத் தன் மகன் சீனப்பா மிகவும் புத்துசாலி என்ற நினைப்பு அவன் தன் மகனை நகருக்கு அழைத்துப் போய் கல்விபயில சோமநாதர் என்ற குருவிடம் ஒப்படைத்தான். சிலநாட்களான பின் தன் மகன் எப்படிப் படிக்கிறான் என்பதைக் காண சிவப்பா குருகுலத்திற்கு வந்தான்.

சோமநாதரும் அவனிடம் "உன் மகன் அதிபுத்திசாலி. அவனுக்குக் கல்வி புகட்டுவது மிகவும் சிரமம்" என்றார். சிவப்பாவோ "நீங்கள் சிரமம் பாராமல் அக்கறை எடுத்துக் கொண்டு அவனுக்குச் சொல்லி கொடுக்க வேண்டும்" என்றான்.

அதுகேட்டு சோமநாதர் சீனப்பாவின் அறிவு எத்தகையது என சிவப்பாவுக்குக் காட்ட நினைத்தார். அதனால் சீனப்பாவை அவர் அழைத்து "முன்காலத்தில் நம் நாட்டில் கைதேர்ந்த நெசவாளிகள் இருந்தார்கள். அவர்கள் தயார் செய்யும் ஒரு புடவையை ஒரு நெருப்புப் பெட்டிக்குள் அடக்கிவைக்க முடியுமாம். புரிந்ததா?" என்றார்.

சீனப்பாவும் புரிந்தது எனத் தலையை ஆட்டினான். குருவும் "நான் சொன்னதிலிருந்து நீ என்ன புரிந்து கொண்டாய் என்பதைச் சொல் பார்க்கலாம்" என்று கேட்டார். சீனப்பாவும் "அந்தக் காலத்தில் நெருப்புப் பெட்டிகள் எல்லாம் மிகப் பெரியனவாக இருந்தன என்று தெரிகிறது." என்றான்.

அப்போது சிவப்பாவுக்குத் தன் மகனின் அறிவு எவ்வளவு எனத் தெரிந்தது. அவன் சோமநாதரிடம் தன்னை மன்னிக்கும்படி வேண்டித் தன் மகனுக்கு நன்றாகக் கல்வி புகட்ட வேண்டினான்.



## அம்புலிமாமா அனுபந்தம்— 26

# மகான்கள் கனவு கண்ட பாரத நாடு



## தியாக மூர்த்தி

பாரத நாட்டு சுதந்திரப் போராட்டத் தலைவர்களில் முக்கியமானவரான பிபின் சந்திரபால் (1858 - 1932) தற்போதைய பங்களாதேஷில் உள்ள சைசெல்லில் பிறந்தவர். ஒத்துழையாமை இயக்கத்தில் கலந்து கொண்டு பிரிட்டிஷ் அரசாங்கத்திடம் பல இன்னல் களை அனுபவித்தவர். நாட்டின் விடுதலைக்காகவும் முன்னேற்றத்திற்காகவும் பாடுபட்ட பிபின் சந்திர பால் மிக உயர்ந்தவராவார். விடுதலைப் போராட்ட காலத்தில் நாடெங்கிலும் புத்துணர்ச்சி பொங்கி எழுகிறது எனக் கனவு கண்டவர் அவர்.

அவர் நாட்டு மக்களிடம் "இந்தப் புனிதச் செய லுக்கு நாடு எல்லோரையும் அழைக்கிறது. பண்டி தர்களையும் கவிஞர்களையும் தத்துவ மேதைகளையும் சாதாரணக் குடி மகனையும் அழைக்கிறது. அந்த அழைப்பை ஏற்று நாம் எவ்விதத் தியாகத்திற்கும் தயாராக வேண்டும். தம் நேரத்தையும் பொருளை யும் செலவிடுவதோடு உடல் பொருள், ஆவி அனைத்தையும் தியாகம் செய்யத் தயாராக இருக்க வேண்டும்" எனக் கூறினர்.

இந்த மகான் கனவு கண்ட நாட்டுப் பற்று, தியா கம் ஆகியவை பற்றி நாம் சிந்தித்து எவ்வளவுக்கு செயல்பட்டு வருகிறோம் என்பதை நினைத்துப் பார்ப்போமாக!

## உங்களுக்குத் தெரியுமா?

1. முதன் முதலாக இதயமாற்று அறுவை சிகிச்சையைச் செய்தவர் யார்?
2. இதய மாற்ற சிகிச்சையைப் பெற்றவர் யார்?
3. ஏசுவின் சிலுவையைச் செய்த போது இருந்த ரோமானிய சக்கரவர்த்தி யார்?
4. குரங்குகளில் மிகப் பெரிதானதின் இனம் எது?
5. தனக்கு எவ்வித தெய்வீக சக்தியும் இல்லை எனக் கூறிய இருபதாம் நூற்றுண்டுச் சக்கரவர்த்தி யார் ?
6. அவர் எந்த சந்தர்ப்பத்தில் இதைக் கூறினர்?

(விடை 36ம் பக்கத்தில்)

# பிரம்மா

நான் முகங்களை உடைய பிரம்மா கிருஷ்டியின் ஆரம்பத்தில் விஷ்ணுவின் தொப்புளிலிருந்து தோன்றிய தாமரை மலரில் அவதரித்தவராம். உலகில் யாவற்றையும் படைக்கும் சக்தியுடன்கூடிய பிரம்மாவுடன் ஒளி, ஓங்காரநாதம் ஆகியவையும் பிறந்தனவாம்.

பிரம்மா அண்ட சராசரங் களோடு பல முனிவர்களையும் பிரஜாபதிகளையும் படைத்தார். அவர்களில் மரீசி, அத்திரி, ஆங்கீரசர், புலகர், புலஸ்தியர், கிருது, வசிஷ்டர், பிருகு, தக்ஷகர், நாரதர் முதலானோர் குறிப்பிடத்தக்கவர்கள். சிருஷ்டிகர்த்தாவான பிரம்மாவிடமிருந்து கொடிய குணங்கள் கொண்ட ராக்ஷஸர்கள் அவ்வப்போது அரிய வரங்களைப் பெற்று வந்ததாகப் புராணக் கதைகள் கூறுகின்றன.

ஆதிகவி வால்மீகியின் வாயில் முதல் சுலோகத்தையும், வேதவியா சர் வேதங்களை நான்கு பிரிவு களாக்கி உலக நலனைச் செய்ய வைத் ததும் பிரம்மாவின் தூண்டுதல்தான். கல்விக்கு அதிபதியான சரஸ்வதி தேவி பிரம்மாவின் மனைவி.



# அம்புலிமாமா செய்திகள்



## எவரெஸ்ட் ஏறிய மிகச் சிறிய வயதினன்

பிரான்ஸ் நாட்டைச் சார்ந்த பெட்ரண்ட்ரோஷ் என்ற பதினைந்து வயது வாலிபன் அண்மை யில் எவரெஸ்ட் சிகரத்தை அடைந்தானாம். உலகில் மிக உயரமான இந்த சிகரத்தின் மீது ஏறியவர்களில் இவனே மிகக் குறைந்த வயதுடையவன். இவனுடன் சென்ற ஒற்றைக் கால் இளைஞன் யோவெரிபிஷனாய் கொஞ்ச தூரமே ஏற முடியாததால் சிகரத்தை முன்னதாக அடைய முடியவில்லையாம்.




## அதிகரிக்கும் அபாயம்

பூமியிலுள்ள நதிகளையும், கடல்களையும் மனிதன் அசுத்தப்படுத்தி இன்றைய சுற்றுப் புறச் சூழலைக் கெடுத்து வருகிறான். தரையில் செய்தது போதாது என்று இப்போது அவன் வான வெளியிலும் தன் கைவரிசையைக் காட்டத் தொடங்கிவிட்டான். பழைய ராக்கட்கள் வானத்தில் சுற்றி வருகின்றன. அவை பழுதடைந்து விட்டால் வானவெளியும் தூய்மை கெட்டு பல விபரீத விளைவுகளை ஏற்படுத்தி விடும்.



# இலக்கிய உலகம்

1. இந்தியாவில் நடந்த சிப்பாய்க் கலகத்தை நேரில் கண்டு உலகிற்குத் தெரியப்படுத்திய ஆங்கிலேயப் பத்திரிகையாளர் யார்?
2. அவர் எந்தப் பத்திரிகையில் பணிபுரிந்தவர்?
3. வால்டேர் கேலி அடிப்படையில் எழுதிய புகழ்பெற்ற நாடகம் எது?
4. 2,200 நாடகங்களை எழுதிய நாடகாசிரியர் யார்?
5. பௌத்தர்களின் புனித நூல்கள் எந்த மொழியில் எழுதப் பட்டன?

## விடைகள்

### உங்களுக்குத் தெரியுமா?

1. டாக்டர் கிரிஸ்டியன் பெர்னர்ட்.
2. லூயி வாஸ்கங்ஸ்கீ.
3. பைபீரியன்.
4. மாண்ட்ரீல்.
5. ஜப்பான் சக்கரவர்த்தி ஹீரோ ஹிடோ.
6. இரண்டாவது உலகப் போரில் ஜப்பான் தோல்வி கண்டபோது.

### இலக்கியம்

1. வில்லியம் ஹோவார்ட் ரஸ்ஸல்
2. லண்டன் பத்திரிகை "தி டைம்ஸ்."
3. காண்டைட்
4. ஸ்பெயினைச் சேர்ந்த லோஸ் டி வேகா
5. பாலி

உலகப் புராணக்கதைகள்



# தீப்ஸ் நகர நிர்மாணம்

டையரின் இளவரசனை காட்மஸிடம் சோதிடர்கள் அவன் ஒரு குறிப்பிட்ட பசுவைப் பார்ப்பான் என்றும் அவன் அதன் பின்னாலேயே சென்று அது படுக்கும் இடத்தில் ஒரு புதிய நகரை நிர்மாணிக்க வேண்டும் என்றும் கூறினார்கள். காட்மஸும் அப்படிப் பட்ட பசுவைக் கண்டு அதன் பின்னால் சென்றான்.

அந்தப் பசு ஜனநடமாட்டமே இல்லாத ஒரு அடர்ந்த காட்டினுள் போய் ஓரிடத்தில் படுத்தது. அந்த இடத்தில்தான் புதிய நகரை அமைக்க வேண்டும் என்று காட்மஸ் அறிந்து கொண்டான். அந்த இடத்தைக் குறியிட்டு விட்டு அவன் அங்கிருந்து சென்றான்.





இளவரசன் தன் ஆட்களோடு அந்த இடத்திற்குத் திரும்பி வந்தான். புதிய நகரை அங்கு அமைப்பதற்குமுன் அங்கு வசிக்கப் போகிறவர்களுக்குப் போதிய தண்ணீர் கிடைக்குமா என்று அவன் பார்க்கலானான். அவன் தன் ஆட்களிடம் அங்கு ஏதாவது நீர் நிலை உள்ளதா என்று கண்டு வரச் சொன்னான்.



அவர்களும் தேடியதில் அருகிலேயே ஒரு நீர்வீழ்ச்சியைக் கண்டனர். அவர்கள் அதன் நீரைப் பருகப் போனபோது அதன் பின்னாலிருந்து ஒரு ராட்சஸப் பாம்பு வெளியே வந்தது.

அது அந்த ஆட்களைப் பிடித்துக் கொன்றது. அவர்களது மரணக் குரல் காட்மஸின் காதில் விழவே அவன் அந்த இடத்திற்கு ஓடிச் சென்றான்.





இளவரசன் காட்மஸ் ஏதன் தேவதையை வேண்டி அவளது ஆசிபெற்று அந்த ராட்சஸப் பாம்பை எதிர்த்துப் போராடினான். அந்தச் சண்டை சற்று நேரம் நடந்தது. முடிவில் அவன் அதனைக் கொன்று விட்டான்.

அந்த ராட்சஸப் பாம்பின் பற்கள் சிதறி விழுந்தன. இளவரசன் அவற்றை எடுத்து ஓரிடத்தில் வைத்து எரித்தான். இப்படி அவன் செய்தது தேவதை கூறியபடித் தான். அவன் மட்டும் அவ்வாறு செய்யாது விட்டிருந்தால் விபரீத விளைவுகள் ஏற்பட்டிருக்கும்.





அப்பற்களை எரித்த இடத்திலிருந்து திடீரென பல வீரர்கள் தோன்றினார்கள். அவர்களது கோபத்தைக் கண்டு இளவரசன் அஞ்சி ஒரு பாறையின் பின்னால் ஒளிந்து கொண்டான்.

இளவரசன் அங்கிருந்தபடியே அந்த வீரர்களை நோக்கி ஒரு கல்லை விட்டெறிந்தான். அந்தக் கல் எங்கிருந்து வந்தது என்று அந்த வீரர்களுக்குத் தெரியவில்லை. அவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்து "நீதான் கல்லை எறிந்தாய்" என்று குற்றம் சாட்டிக் கொண்டார்கள்.





அதனால் அவர்களிடையே பயங்கரச் சண்டை மூண்டது. அவர்கள் ஒருவரை ஒருவர் தாக்கிக் கொன்று இறந்து விழுந்தார்கள்.

அவர்களில் ஐந்து பேர்கள் மட்டுமே எஞ்சி இருந்தார்கள். அவர்கள் இளவரசன் காட்மஸைத் தம் தலைவனாக ஏற்றுக் கொண்டார்கள். அவர்கள் அவனுக்குப் புதிய நகர நிர்மாணத்தில் உதவுவதாகக் கூறவே அவனும் மகிழ்ச்சி அடைந்தான்.





கிரேக்க நாட்டில் தீப்ஸ் நகரம் தோன்றிய வரலாறு இதுதான். அந்த ஐந்து வீரர்கள் அந்நகரின் உயர் குடும்பத் தலைவர்களாகத் திகழ்ந்தார்கள். பல நூற்றாண்டுகளுக்குப் பின் இந்நகரை மகா அலெக்ஜாண்டர் அழித்தான். அந்த அழிவுற்ற இடம் இன்று திவாய் என்ற பெயரில் உள்ளது.



# ஊரே தந்தது!

சிங்காரம் வடிகட்டின கஞ்சன். ஒருநாள் அவன் வேறொரு ஊருக்குப் போய்விட்டுத் தன் ஊருக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தான். அப்போது ஒரு மரத்தடியே ஒரு கிழவன் படுத்து முக்கி முனகிக் கொண்டிருப்பதை அவன் கண்டான். அவன் சிங்காரத்தைப் பார்த்து "அப்பனே! எனக்கு ஒரே தாகமாக இருக்கிறது. கொஞ்சம் தண்ணீர் கொடுத்து என்னைக் காப்பாற்று" என வேண்டினான்.

சிங்காரமும் அவனருகே போய் "இதோ பார். நான் வடிகட்டின கஞ்சன் என்று பெயர் பெற்றவன். அந்தப் பெயரை நான் காப்பாற்றி வருகிறேன். நான் எந்த வேலையையும் சும்மா செய்ய மாட்டேன். நான் உனக்கு ஏதாவது உதவி செய்ய வேண்டும் என்றால் அதற்கு பதிலாக நீ எனக்கு ஏதாவது கொடுக்க வேண்டும். உன்னிடம் ஏதாவது பணம் இருந்தால் கொடு. நான் தண்ணீர் கொடுக்கிறேன்!" என்றான்.

கிழவனும் தன் இடுப்பிலிருந்து ஒரு வெள்ளி நாணயத்தை எடுத்துக் கொடுத்தான். அதை வாங்கிக் கொண்டு சிங்காரம் அக்கிழவனுக்குக் குடிக்கத் தண்ணீர் கொடுத்தான். கிழவனும் அதைக் குடித்த பிறகு "நீ செய்த இந்த உதவியை நான் மறக்க மாட்டேன். நான் உன்னோடு உன் ஊருக்கு வந்து உனக்கு ஒரு உதவியைச் செய்கிறேன்" என்றான்.

அதற்கு சிங்காரம் "உன்னைப் பார்த்தால் பரம ஏழை என்று தெரிகிறது. மேலும் ரொம்ப புத்திசாலி அல்ல என்பதும் எனக்குப் புரிகிறது. அப்படி இல்லாவிட்டால் நீ குடித்த தண்ணீருக்கு ஒரு வெள்

-வெ. லாவண்யா-



அதனால் அவர்களிடையே பயங்கரச் சண்டை மூண்டது. அவர்கள் ஒருவரை ஒருவர் தாக்கிக் கொன்று இறந்து விழுந்தார்கள்.

அவர்களில் ஐந்து பேர்கள் மட்டுமே எஞ்சி இருந்தார்கள். அவர்கள் இளவரசன் காட்மஸைத் தம் தலைவனாக ஏற்றுக் கொண்டார்கள். அவர்கள் அவனுக்குப் புதிய நகர நிர்மாணத்தில் உதவுவதாகக் கூறவே அவனும் மகிழ்ச்சி அடைந்தான்.





கிரேக்க நாட்டில் தீப்ஸ் நகரம் தோன்றிய வரலாறு இதுதான். அந்த ஐந்து வீரர்கள் அந்நகரின் உயர் குடும்பத் தலைவர்களாகத் திகழ்ந்தார்கள். பல நூற்றாண்டுகளுக்குப் பின் இந்நகரை மகா அலெக்ஜாண்டர் அழித்தான். அந்த அழிவுற்ற இடம் இன்று திவாய் என்ற பெயரில் உள்ளது.

ஒரு ரூபாய் தானமாகப் பெற்ருன் என்ருல் அக்கிழவனிடம் ஏதோ ஒரு சக்தி இருக்க வேண்டும் என்று அவ்வூரார் நினைத்தார்கள்.

அதனுல் அந்த ஊர்க்காரர்கள் எல்லோரும் அக்கிழவனைத் தேடிப் போய் ஒரு ரூபாய் தானம் கொடுத்து அவனது ஆசிகளைப் பெறலானுர்கள். இப்படி முதல்நாளிலேயே அக்கிழவனிடம் பத்தாயிரம் ரூபாய் சேர்ந்து விட்டது. அவன் அதிலிருந்து ஒரு ஆயிரம் ரூபாயை எடுத்துக் கொண்டு சிங்காரத்தின் வீட்டிற்கு போய் "இதோ ஆயிரம் ரூபாய். நாளையும் எனக்கு ஒரு ரூபாய் தானம் கொடு. மறந்து விடாதே" என்று கூறிவிட்டு சென்ருன். மறு நாள் கொடுக்க ஒரு ரூபாயைக் கொடுத்து விட்டும் சென்ருன்.

இப்படியே இரண்டு வாரங்கள் கழிந்தன. சிங்காரத்திற்கு தினமும் ஆயிரம் ரூபாய் வீதம் கொடுத்தது போக மீதம் லட்சம் ரூபாய் அந்தக் கிழவனிடம் சேர்ந்து விட்டது. அவன் அந்தப் பணத்தைக் கொண்டு நல்ல வீட்டை வாங்கிக் கொண்டு சமையல்காரன், வேலைக்காரன் என்று ஆட்களையும் நியமித்துக் கொண்டான். பணம் வட்டிக்குக் கொடுத்தும் லேவா தேவி செய்து வந்தான். அப்போதும் சிங்காரத்திடம் தானம் பெறுவதை அவன் விட்டுவிடவில்லை.



அவ்வூரார் இதனை கவனித்தார்கள். அவர்கள் ஒரு மனிதனிடம் "நீ அந்தக் கிழவன் செய்வதை எல்லாம் வேவு பார்த்து வா" என்ருர்கள். அவனும் இரண்டு நாட்கள் பார்த்து விட்டு கிழவன் பணம் கொடுத்து விட்டு மறுநாள் ஒரு ரூபாய் தானம் வாங்கிப் போகும் விவரத்தைக் கூறினுன். அதைக் கேட்ட ஊரார் கோபம் கொண்டு கிழவனும் சிங்காரமும் சேர்ந்து தங்களை எல்லாம் ஏமாற்றி வருவதாக வழக்குத் தொடுத்தார்கள்.

நீதிபதியும் சிங்காரத்தையும் கிழவனையும் தம் நீதிமன்றத்தில் ஆஜராகும்படி ஆணை பிறப்பித்தார். யாவர் முன்னிலையில் விசாரணை

நடந்தது. கிழவன் தன் வாக்கு மூலமாக'' இதில் சிங்காரம் எந்த மோசடியையும் செய்யவில்லை. அவன் என்னை நம்பி தானம் செய் தான். எனக்கு தானம் அளித்த மற்றவர்களுக்கு நான் எவ்வித வாக்குறுதியையும் அளிக்கவில்லை. அவர்கள் தாமாக இஷ்டப்பட்டே எனக்குப் பணம் கொடுத்தார்கள். இந்தப் பதினைந்து நாட்களில் எந்த ஒரு குடும்பமும் பதினைந்து ரூபாய்களுக்கு மேல் அளிக்க வில்லை. அதுவும் அவர்கள் தாமே வந்து என்னைக் கண்டு கொடுத்து விட்டுப் போனார்கள். எனவே நான் யாரையும் ஏமாற்றிப் பணம் சேர்க்கவில்லை. சிங்காரம் எனக்கு தானம் கொடுத்ததால் எனக்கு நிறையப் பணம் கிடைத்தது. அதி லிருந்து தினமும் ஆயிரம் ரூபாயை நான் கொடுத்து வந் தேன். இதில் என் குற்றமோ சிங்காரத்தின் குற்றமோ எதுவும் இல்லை'' என்றான்.

ஊரார் சார்பில் "இது கட்டுக் கதை இவர்களை தண்டிக்க வேண் டும்'' என வற்புறுத்தப்பட்டது. அப்போது அக்கிழவன் நீதிபதி யிடம் "ஐயா! எனக்கு இந்த யோசனை இருபத்தைந்து வருடங் களுக்கு முன்பு தோன்றியது. இதற் காக நான் வடிக்கட்டின கஞ்சனை இவ்வளவு காலமாகத் தேடி அலைந் தேன். உலகில் தானம் செய்ய வேண்டும் என்ற எண்ணம் எளி தில் யாருக்கும் வருவதில்லை. ஆனால் சிங்காரத்தை நான் பயன்படுத்தி இவ்வூரில் பதினைந்தாயிரம பேர் களை அவ்விதம் நினைக்க வைத் தேன். எனக்குத் தெரிந்து இம் மாதிரி மாறுதலடைந்த ஊரை எங்குமே நான் பார்க்கவில்லை.'' என்றான்.

அதுகேட்டு ஊரார் தம் அறி யாமை குறித்து நினைத்துத் தலை குனிந்து கொண்டார்கள்.






இராமர் கூறியபடி இலட்சுமணன் கிஷ்கிந்தைக்குச் சென்றான். தன் வில்லைத் தோளில் சுமந்து கொண்டு வழி நெடுக அவன் சுக்கிரீவனிடம் என்ன பேசுவது, அதற்கு அவனது பதில் என்னவாக இருக்கம் என்றெல்லாம் யோசித்தவாறே சென்றான். அவனுக்கு சுக்கிரீவன் மெத்தனமாக இருந்தது மிகுந்த கோபத்தை மூட்டியது.

கோபத்தொடு இலட்சுமணன் வந்து கொண்டிருப்பதைக் கண்ட சில வானரர்கள் அவன் கிஷ்கிந்தையைத் தாக்க வருகிறான் என்று நினைத்துக் கற்களையும் மரக்கிளைகளையும் ஒடித்து எடுத்துக் கொண்டார்கள். இதைக் கண்ட இலட்சுமணனுக்கு மேலும் அதிகக் கோபம் வந்து விட்டது. அதுகண்டு வானரர்கள் பயந்து ஓடிப் போய் சுக்கிரீவனிடம் இலட்சுமணன் வந்து கொண்டிருப்பதைத் தெரிவித்தார்கள். அதைக்கேட்ட சுக்கிரீவன் அவர்களிடமும் அமைச்சர்களிடமும் "இலட்சுமணன் ஏன் கோபம் கொள்ள வேண்டும்? ஒருவேளை அவர்கள் எனக்குச் செய்த உதவிக்கு பதிலாக இன்னமும் இதுவரை நான் எதுவும் செய்யவில்லை என்பது ஒருவேளை அவர்களது கோபத்திற்குக் காரணமாக இருக்கலாம்" என்றான்.

அப்போது அனுமார் "ஆம். நீ சொல்வதுபோல அவர்களுக்குப் பதிலுபகாரம் செய்யாததுகூட காரணமாக இருக்கலாம். நீ சற்றுக்

-சுக்கிரீவனின் உதவி-



காலதாமதம் செய்து விட்டாய். மழைக் காலம் முடிந்து விட்டது. இப்போது போருக்கான ஏற்பாடுகளைச் செய்ய ஏற்றகாலம். இதை நினைவூட்டவே இராமர் இலட்சுமணனை இப்போது அனுப்பி இருக்கிறார்" என்றார்.

இதற்குள் அங்கதன் ஓடிப்போய் இலட்சுமணனை வரவேற்று அழைத்துக் கொண்டு வந்தான். இலட்சுமணனும் கிஷ்கிந்தையிலுள்ள மாளிகைகளைப் பார்த்தவாறே சுக்கிரீவனின் அரண்மனையை அடைந்தான். அது இந்திரனின் மாளிகை போல இருந்தது. சுக்கிரீவனின் அந்தப்புரத்தில் இசை மழை பொழிந்து கொண்டிருந்தது. நாட்டிய மங்கைகள் ஆடிக் கொண்டிருக்க பல அழகிய பெண்களுக்கிடையே சுக்கிரீவன் இருந்தான். சுக்கிரீவனின் போக விலாசத்தை இது. யாரும் சொல்லாமலே இலட்சுமணனுக்கு எடுத்துக்காட்டியது.

இவற்றை எல்லாம் கண்ட இலட்சுமணனின் கோபம் உச்ச நிலையை எட்டியது. அவன் தன் வில்லை எடுத்த அதன் நாணை மீட்டி பயங்கர ஒலியை ஏற்படுத்தினான். அதுகேட்டு சுக்கிரீவன் இடி விழுந்த நாகம் போலப் பயந்தான். அவனது உடல் நடுங்கியது. நாவால் பேச முடியவில்லை. அவன் தாராவிடம் தாழ்ந்த குரலில் "தாரா! சாது போலத் தென்பட்ட இந்த இலட்சுமணனுக்கு எப்படித்தான் இப்படிக் கடும் கோபம் வந்ததோ? நான் அப்படி என்ன செய்து விட்டேன் இவன் இப்படிக் கோபம் கொள்ள? நான் இப்போது இவனிடம் பேசினால் இவன் மேலும் கோபம் கொண்டு விடுவான். எனவே நீ இவனிடம் நல்லவிதமாகப் பேசி இவனது கோபத்தைத் தணி. அதன் பிறகு நான் பேசுகிறேன்" என்றான்.

தாராவும் இலட்சுமணனை அணுகி "ஐயா! தங்களது நண்பரான சுக்கிரீவ மன்னர் மீது தங்களுக்கு ஏன் இவ்வளவு கோபம்? அவர் உங்களுக்குச் செய்ய வேண்டிய உதவியைச் செய்யாமல் இருக்கிறாரே என்பதனாலா? அவர் சற்



றுக் காலதாமதம் செய்து விட்டது என்னவோ உண்மைதான். ஆனால் அதை மறந்து விடவில்லை. அவர் உங்களுக்கு முன் எம்மாத்திரம்? உங்களை விடத் தாழ்ந்த அவரை உங்களைப் போன்ற மேலோர் மன்னிக்கவே செய்வார்கள். நீங்களும் இந்த காலதாமதத்திற்காக சுக்கிரீவனை மன்னித்து விடுங்கள்'' என்று வேண்டினாள்.

அவள் இலட்சுமணனை சுக்கிரீவனின் முன் அழைத்துச் சென்றாள். சுக்கிரீவன் மிகுந்த ஆடம்பரத்துடன் பட்டாடை உடுத்தி வாசனை திரவியங்களைப் பூசிக் கொண்டு மலர் மாலைகளை அணிந்து தங்க சிம்மாசனத்தின் மீது அமர்ந்திருந்தான். அவனைச் சுற்றிப் பல அழகிய நங்கைகள் இருந்தனர். அதைக்கண்ட இலட்சுமணனின் கண்கள் கோவைப்பழம் போலச் சிவந்தன.

இலட்சுமணனின் நிலையைக் கண்டு பயந்து தன் சிம்மாசனத்தை விட்டு இறங்கி வந்தான். அவனோடு இருந்த பெண்கள் எழுந்து ஒரு ஓரமாக நின்று மரியாதை செலுத்தினார்கள். சுக்கிரீவன் தலை குனிந்தவாறே இலட்சுமணனின் முன் நின்றான்.

அப்போது இலட்சுமணன் ''சுக்கிரீவா! நீ என் தமையனாரின் உதவி பெற்றாய். உன் வேலை முடிந்ததும் நீ அவருக்குச் செய்ய வேண்டியதை மறந்து விட்டாயே! நீ செய்நன்றி மறந்தவன். சொன்ன சொல்லைக் காக்காதவன். சீதா தேவியைத் தேடும் முயற்சியில் ஏன் நீ இன்னமும் இறங்கவில்லை? உன்னை என் தமையனார் வானர மன்னனாக்கியது வீணே. உன்னை நான் என் அம்பிற்கு இரையாக்கி உன்னையும் வாலி சென்ற இடத்திற்கே அனுப்பி விடுகிறேன் பார்'' என்று கர்ஜித்தான்.

அப்போது மீண்டும் தாரா சுக்கிரீவனுக்காகப் பரிந்து கொண்டு வந்த ''இளையவரே! சுக்கிரீவன் நன்றி மறப்பவனோ, பொய் கூறுபவனோ அல்ல. நீண்ட காலமாகக் கஷ்டங்களை அனுபவித்தவன். அத

ஞல் சுகவாழ்வு கிடைத்ததும் சற்று தன்னை மறந்து விட்டான். அதனுல் அவனை மன்னித்து விடுங்கள். இராமருக்காக அவன் மனைவி, மக்கள், உற்றூர் உறவினர் ஆகிய எல்லோரையும் விட்டு என்ன வேண்டுமானுலும் செய்யத் தயார். சீதையைக் கண்டுபிடித்து இராவணனேடு போர்புரியும் திறமையும் பெற்றவன். உங்கள் வேலையை மேற்கொண்டு வானரர்களுக்கு எல்லாம் தகவல் அனுப்பி இருக்கிருன். அவர்கள் வரவேண்டும் வந்ததும் மேற்கொண்டு செயல்படுவான். அவர்களும் இன்று நாளைக்குள் வந்து விடுவார்கள். அதுவரை பொறுத்துக் கொள்ள வேண்டும்'' என்ருள்.

அதைக்கேட்ட இலட்சுமணனின் கோபம் தணிந்தது. அப்போது சுக்கிரீவன் அவனிடம் ''இலட்சுமணு! நான் சற்று மெத்தனமாக இருந்து விட்டேன். அதற்காக என்னை மன்னித்து விடு. ஏதோ தவறிவிட்டேன். யானைக்கும் அடி சறுக்கும் அல்லவா?'' என்ருன்.

பிறகு அவன் தன்னருகே நின்ற அனுமாரிடம் ''அனுமாரே! நம் நாட்டைத் தவிர உலகின் மற்ற பகுதிகளில் உள்ள வானரர்கள் யாவரும் இன்னும் பத்து நாட்களுக்குள் இங்கு வந்து சேர வேண்டும் என்றும் அப்படி வராதவர்கள் கொல்லப்படுவார்கள் என்றும்



எல்லோருக்கும் அறிவியுங்கள்'' என்ருன்.

அனுமாரும் அச்செய்தியை அறிவிக்க நாலாதிசைகளிலும் வாணரர்களை அனுப்பினுர். சுக்கிரீவன் ஒரு தங்கப் பல்லக்கைக் கொண்டு வரச் சொன்னுன். அதில் இலட்சுமணனை அமர்த்தித் தூக்கிவரச் செய்து வானரர்கள் புடைசூழ அவன் இராமர் இருக்கும் இடத்திற்குப் புறப்பட்டான்.

பல்லக்கு இராமர் இருக்கும் இடத்தை அடைந்தது. சுக்கிரீவன் இலட்சுமணனை அழைத்துக் கொண்டு இராமரைக் காணச் சென்ருன். அவன் இராமரின் கால்களில் விழுந்து வணங்கினுன். பின்னர் எழுந்து கைகூப்பி நின்ருன். இராம

ரும் அவனை அன்புடன் அணைத்துக் கொண்டு உட்காரச் சொன்னார்.

எல்லோரும் அமர்ந்தபின் இராமர் சுக்கிரீவனிடம் போருக்கான ஆயத்தங்கள் எவ்வளவில் இருக்கின்றன என்று கேட்டார். சுக்கிரீவனும் "இராமரே! பல்லாயிரக்கணக்கான வானரர்கள் தங்களுக்கு உதவ வந்து கொண்டிருக்கிறார்கள். இராவணனைப் பூண்டோடு ஒழித்து நாம் விரைவிலேயே சீதாதேவியை மீட்டு விடுவோம்" என்றான். பிறகுதான் மேற்கொண்ட நடவடிக்கைகளை அவன் இராமரிடம் விவரமாகக் கூறவே அவரும் அதுகேட்டு மகிழ்ந்தார்.

இந்த சமயத்தில் வானத்தில் வெகு உயரத்திற்கு தூசி எழும்பியது. அதற்குக் காரணம் பல இடங்களிலிருந்து வானரங்கள் கிஷ்கிந்தைக்கு வந்து சேர்ந்து கொண்டிருந்ததேயாகும். நதிக்கரைகளிலும் சமுத்திரக் கரையிலும் மலைகளிலும் வசிக்கும் வானரர்கள் கோடிக்கணக்கில் வந்து சேர்ந்தார்கள். சிலர் சிவப்பாகவும், வேறு சிலர் வெளுப்பாகவும், வேறு சிலர் சாம்பல் நிறத்திலும் இருந்தனர். இந்த வானரங்களை எல்லாம் அழைத்துக் கொண்டு சதவலி என்ற வானரவீரன் வந்து சேர்ந்தான். தங்க நிற மேனி கொண்டவன் சுசேனன். இவன் தாராவின் தந்தையாவான். இவனும் பலகோடி வானரர்களை அழைத்து வந்தான். இதைப்போலவே ருமையின் தந்தை தாரனும் பல்லாயிரக்கணக்கான வானரர்களுடன் வந்து



சேர்ந்தான்.

அனுமாரின் தந்தை இருபத்தையாயிரம் வானரர்களுடன் வந்தான். கவாட்சனும் தூம்ரனும் ஆயிரக் கணக்கான வானரங்களுடன் கரடிகளுடனும் வந்தார்கள். நீலன் கருப்பு வானரப்படையோடு வந்தான். கவயன் பல லட்ச வானரர்களுடன் வந்தான். தரிமுகன், மைந்தன், திவிதீயன், கஜன் முதலானோர் பல்லாயிரக்கணக்கான வானரர்களைக் கூட்டிக் கொண்டு வந்தார்கள். ஜாம்பவான் பத்து கோடி கரடிகளை அழைத்து வந்தான். ஆக உலகிலுள்ள வானரர்களெல்லாம் கிஷ்கிந்தாபுரிக்கு வந்து சேர்ந்து விட்டார்கள். அவர்களது சத்தம் வானைப் பிளந்தது.

வானரப் பிரமுகர்களெல்லாம் சுக்கிரீவனின் பக்கம் சென்று அவனை வணங்கி நின்றார்கள். சுக்கிரீவனும் அவர்களையெல்லாம் அழைத்துக் கொண்டு போய் இராமரின் முன் நிறுத்தினான்.

பிறகு அவன் இராமரிடம் "நீங்கள் சொல்கிறபடி எல்லாம் செய்ய கோடிக்கணக்கில் வானரர்கள் காத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களில் சிலர் தாம் விரும்பும் உருவத்தை எடுக்க வல்லவர்கள். மிகுந்த பராக்கிரமசாலிகள் பலர். நீங்கள் அவர்களுக்கு என்ன கட்டளை இட்டாலும் அதை உடனே நிறைவேற்றுவார்கள். நான் கூறித்தான் செய்வார்கள் என்பது கிடையாது" என்றான்.

அதைக்கேட்ட இராமர் மகிழ்ந்து "சுக்கிரீவா! நாம் சில விஷயங்



களைத் தெரிந்து கொண்டாக வேண்டும். சீதை உயிருடன் இருக்கிருளா, அப்படியானுல் எங்கே இருக்கிருள்? அவளைக் கவர்ந்து சென்ற இராவணன் எங்கே இருக்கிருன்? இவற்றை நாம் அறிய வேண்டும். இதன் பிறகே நாம் என்ன செய்யலாம் என்பது பற்றி யோசிக்க முடியும். எனவே இவற்றை அறிய நீ உடனேயே தக்க ஏற்பாடு களைச் செய்'' என்ருர்.

சுக்கிரீவன் வினதன் என்பவனைக் கூப்பிட்டு ''நீ ஒரு லட்சம் வானரர்களை அழைத்துக் கொண்டு சீதாதேவியைக் கிழக்கு திசையிலுள்ள பகுதிகளில் தேடிப்பார்'' என்று கூறி அனுப்பினுன். அவர்கள் சீதையையும் இராவணனையும் பற்றித் தகவல் சேகரித்துக் கொண்டு ஒரு மாதத்திற்குள் வர வேண்டும் என்றும் சொல்லி அனுப்பினுன்.

இதைப் போலவே சில வானர வீரர்களைத் தென்திசையில் அனுப்பினுன். இவ்வாறு சென்றவர்களில் நீலன், அனுமார், ஜாம்பவான், சுகோத்திரன், சராரி, சரகுல்மன், கஜன், கவாட்சன், கவயன், பூஷணன், மைந்தன், விஜயன், கந்தமந்தனன், உல்காமுகன், அனங்கன், அங்கதன் முதலானேர் குறிப்பிட்டத்தக்கவர்கள். இவர்களோடு மிகப் பெரிய வானரப்படையே சென்றது.

இதன் பிறகு சுக்கிரீவன் தாராவின் தந்தையான சுஷேணனை மேற்கு திசையில் பல்லாயிரக்கணக்கான வானரர்களோடு சீதையைத் தேட அனுப்பினுன். வடக்கு திசையில் சீதையைத் தேட, சுக்கிரீவன் பல்லாயிர வானரர்களோடு சதவலியை அனுப்பினுன்.

இப்படியாக நாலாதிசைகளிலும் சீதையைத் தேட வானரர்கள் ஏற்பாடு செய்யப்பட்டதை அவன் இராமரிடம் கூறினுன். அவரும் ''சரியான ஏற்பாடுதான். அவர்கள் தகவல் கொண்டு வரும்வரை நாம் காத்திருக்க வேண்டியதே'' என்று கூறினுர்.





# டிசம்பர் பூ

வெகு காலத்திற்கு முன் ரஷ்யாவில் ஒரு பணக்காரன் இருந்தான். அவனது மகள் சோனியா. சோனியாவின் தாய் இறந்து போனதால் அவளது தந்தை இன்னெருத்தியை இரண்டாவது மனைவியாக விவாகம் செய்து கொண்டான்.

கொஞ்ச நாட்களுக்குப் பின் அந்த இளையாளுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அவளுக்கு நடஷா என்று பெயரிட்டனர். அவள் வளர்ந்து பெரியவள் ஆனாள். அவளுக்கும் அவளது தாய்க்கும் சோனியாவின் மீது வெறுப்பு ஏற்பட்டது. அவர்கள் இருவரும் சோனியாவைக் கொடுமைப்படுத்தினார்கள்.

சோனியா புத்திசாலி. பொறுமை மிக்கவள். தன் சிற்றன்னை செய்யும் கொடுமைகளை எல்லாம் அவள் சகித்துக் கொண்டு அவள் செய்யச் சொன்ன வேலைகளை எல்லாம் முகம் கோணாமல் செய்து வந்தாள். சோனியாவின் தந்தை எல்லாவற்றையும் கண்டும் எதுவும் பேசாமல் இருந்தான்.

தாயும் மகளும் எப்படியாவது சோனியாவை வீட்டை விட்டுத் துரத்தி விட வேண்டும் என்று தீர்மானித்தார்கள்.

அது டிசம்பர் மாதம். ரஷ்யாவின் குளிர்காலத்தை மற்ற நாட்டவரால் கற்பனை கூடச் செய்து பார்க்க முடியாது. எங்கும் பனி நிறைந்து செடி கொடிகளே வளராது. இந்த நிலையில் சோனியாவின் சிற்றன்னை அவளிடம் "நீ மலைமீது போய் அதன் உச்சியில் மலரும் பூக்களைப் பறித்து வா. மருந்துக்கு அவை வேண்டும்" என்று கூறி அவளை விரட்டினாள். சோனியாவும் கிளம்பிச் சென்றாள்.

பல நாட்கள் நடந்து நடந்து

-ரஷ்ய நாட்டுப் பழங்கதை-



முடிவில் சோனியா ஒரு மலையின் உச்சியை அடைந்தாள். எங்கும் பனி நிரம்பிக் கிடந்தது. உச்சியில் 'மினுக் மினுக்'கென சிறிய வெளிச்சம் தோன்றவே அந்த இடத்திற்கு அவள் சென்றாள்.

அங்கு நிறைய வெளிச்சம் இருந்தது. குளிர் காய மூட்டிய நெருப்பால் அது ஏற்பட்டது. அதைச் சுற்றி பதினோறு பேர்கள் உட்கார்ந்திருந்தார்கள். சற்றுத் தள்ளி ஒரு சிம்மாசனத்தில் ஒருவர் வீற்றிருந்தார். அவர் தலையில் கிரீடமும், கையில் செங்கோலும் இருந்தன.

கீழே உட்கார்ந்திருந்தவர்களில் ஒருவன் அவளைப் பார்த்து "யாரம்மா நீ? இந்த இடத்திற்குக் கஷ்டப்பட்டுத்தானே நீ வந்தாய்? இதற்கு என்ன காரணம்?" என்று கேட்டான். அவள் ஆச்சரியத்துடன் பார்க்கவே அவனும் "பயப்படாதே. நாங்கள் பனிரெண்டு பேர்களும் பனிரெண்டு மாதங்களின் அதிபதிகள். ஜனவரி, பிப்ரவரி, மார்ச், ஏப்ரல், என்று வரிசையாக வரும் மாதங்களின் பெயர்களே எங்கள் பெயர்கள் அந்தந்த மாதத்தில் அந்த மாதத்தின் பெயர் கொண்டவர், அரசராகி சிம்மாசனத்தில் அமர்வார். இது டிசம்பர் மாதம். அதனால் இப்போது சிம்மாசனத்தில் வீற்றிருப்பவர் டிசம்பர்மன்னர்" என்றான்.

கள்ளங்கபடமற்ற அழகி சோனியா அந்த டிசம்பர் மன்னனைக் கெஞ்சுவது போலப் பார்த்தாள். அவனும் கனிவுடன் அவளைப் பார்த்து "உன்னைப் பற்றிக் விவரமாகச் சொல்" எனவே அவளும் தன்னைப் பற்றிக் கூறி தான் அங்கு வந்த காரணத்தையும் சொன்னாள்.

அப்போது டிசம்பர் மன்னர் ஜூன் பெயருடையவனைப் பார்த்து "இப்போது நீ வந்து இந்த சிம்மாசனத்தில் அமர்ந்து மன்னனாகி இந்தப் பெண்ணின் விருப்பத்தை நிறைவேற்று" என்றான். அதன்படி ஜூன் மன்னனும் சிம்மாசனத்தில் அமர்ந்தான். அவன் தன் செங்கோலை உயர்த்தி நாலாபுறத்திலும் ஆட்டவே மலை மீது படர்ந்திருந்த பனி விலகி எங்கும் பச்சைப்

பசேசென்ற செடி, கொடி, மரங்கள் தென்பட்டன. செடிகளில் மலர்கள் பூத்துத் தொங்கின.

ஜூன் மன்னன் அந்த மலர்களைப் பறித்துக் கொடுத்ததோடு அவை அவள் வீடு போய்ச் சேரும் வரை வாடாமல் இருக்கும் எனவும் கூறினான். அதன் பின் அவன் சிம்மாசனத்திலிருந்து இறங்கி டிசம்பர் மன்னன் சிம்மாசனத்தில் அமர்ந்ததும் முன் போலப் பனி எங்கும் படர்ந்து விட்டது.

சோனியா அந்தப் பனிரெண்டு மன்னர்களையும் வணங்கி நன்றி தெரிவித்து விடை பெற்றுக் கொண்டாள். அங்கிருந்து கிளம்பி அவள் சில நாட்களுக்குப் பின் மலர்களோடு தன் வீட்டை அடைந்தாள். சோனியா திரும்பி வந்ததைக் கண்ட அவளது சிற்றன்னையும் நடஷாவும் ஆச்சரியப்பட்டார்கள்.

சோனியா திரும்பி வந்து விடுவாள் என்று அவர்கள் கனவிலும் நினைக்கவில்லை. பனி கொட்டும் காலத்தில் அவளுக்கு மலர்களே கிடைக்காது என்றும் அவள் பனியில் விறைத்துப் போய் விழுந்து உயிர் விட்டு விடுவாள் என அவர்கள் எண்ணி இருந்தார்கள்.

அவர்கள் "உனக்கு இந்த பூக்கள் எங்கிருந்து கிடைத்தன?" என்று உரத்த குரலில் கேட்டார்கள். சோனியா மலைக்குப் போனது முதல் திரும்பிய வரை நடந்ததை எல்லாம் விவரமாகக் கூறினாள். அதைக் கேட்ட அவளது சிற்றன்னை "ரொம்பவும் கர்வப்பட்டுக் கொள்ளாதே. என் மகள் நடஷாவும்



அங்கே போய் ஒரு கூடை பூக்களைக் கொண்டு வருவாள், பார்'' எனக் கூறினாள். நடஷாவும் சோனியா சென்ற மலைக்கே சென்றாள். அங்கு சோனியா கண்டது போலவே எரியும் நெருப்பைச் சுற்றி பதினோறு பேர்கள் உட்கார்ந்திருப்பதையும் இன்னொருவர் சிம்மாசனத்தில் அமர்ந்திருப்பதையும் அவள் கண்டாள்.

பதினோறு மன்னர்களில் ஒருவன் நடஷாவைப்பார்த்து "யாரம்மா நீ?'' என்று கேட்டான். அவளோ துடுக்காக "நான் யாராக இருந்தால் உனக்கு என்ன? உன் வேலையைப் பார்த்துக் கொண்டு போ'' எனக் கூறி நான்கடி எடுத்து வைத்தாள். அப்போது சிம்மாசனத்திலிருந்து மன்னன் தன் செங்கோலை ஆட்டவே பனிக்கட்டிகள் அவள் மீது விழுந்தன-அவள் பனிக்குள் புதைந்து இறந்து போனாள்.

சோனியாவின் சிற்றன்னை தன் மகள் திரும்பி வருவாள் என்று பல நாட்கள் எதிர்பார்த்தாள். நடஷா வராதது கண்டு அவளே அந்த மலைக்குச் சென்றாள். அங்கு கண்ட மாத மன்னர்களிடம் கர்வத்தோடு அலட்சியமாக அவள் பேசவே அவளுக்கும் அவள் மகளுக்கு நேர்ந்த கதியே ஏற்பட்டது.

தன் சிற்றன்னையும் திரும்பி வராமல் போகவே சோனியா அந்தப் பனி மலைக்குப் போய் மாத மன்னர்களைக் கண்டு அவர்களை விசாரித்து நடஷாவும் அவளது தாயும் இறந்து போனதைத் தெரிந்து கொண்டாள். அவள் அவர்களிடம் உருக்கமாக வேண்டி நடஷாவையும் அவளது தாயையும் உயிர்ப்பித்துத் தரக் கேட்டுக் கொண்டாள். அவர்களும் அவள் கோரியபடியே செய்தனர்.

ஜூன் மாதத்தில் பூக்க வேண்டிய மலர்.அவளுக்கு டிசம்பர் மாதத்தில் பூத்ததால் அவற்றிற்கு அன்று முதல் டிசம்பர் பூக்கள் என்ற பெயர் ஏற்பட்டது.






# தனக்கு வந்தால்

பரமசிவம் சிறு நிலச்சுவான்தாரர் தான். ஆனால் அந்த ஊரில் அவருக்கு மதிப்பும் கௌரவமும் அதிகம். அவர் என்ன சொன்னாலும் அவ்வூரார் ஏற்பார்கள். சிறு வழக்குகள், பிரச்னைகள் எல்லாம் அவர் முன்கொண்டு செல்லப்படும். அவரும் அவற்றிற்குத் தீர்ப்புகூற அதனை யாவரும் ஏற்கவே செய்தனர்.

பரமசிவத்திற்கு வயதாகி விட்டது. அவர் தம் வாழ்நாளில் அதிகம் சம்பாதிக்கவில்லை. அவர் தம் மகன் ரங்கனுக்குத் தன் சிறு நிலத்தையும்தான் பெற்ற கௌரவத்தையும் புகழையும் தான் கொடுத்தார். ரங்கனும் தன் தந்தையைப் போலவே ஊராரின் பிரச்னைகளுக்கும் வழக்குகளுக்கும் தீர்ப்பு கூறி வந்தான்.

ஒருநாள் சுப்பையன் என்ற கிழவன் தன் மகன் ராமய்யன் என்பவனை அழைத்து வந்து ரங்கனிடம் "இந்த என் மகன் என்னை வைத்துக் காப்பாற்ற முடியாது என்கிறான். நானோ கிழவன் இந்த வயதில் என்னால் பாடுபட்டுச் சம்பாதிக்க முடியுமா? என் ஒரே மகனை இவனை விட்டு நான் எங்கே போவேன்?" என்றான்.

ராமைய்யனும் "என் தந்தை தன் இளம்வயதில் ஏராளமாகச் சம்பாதித்த போதிலும் குடி, சூதாட்டம் போன்றவைகளில் எல்லாவற்றையும் இழந்து விட்டார். அதனால் தான் நான் சொத்து எதுவும் இல்லாமல் கிடைக்கும் வருமானத்தில் கால்வயிற்றுக் கஞ்சி குடித்து வருகிறேன். இந்த நிலையில் இவரையும் வைத்து என்னால் எப்படிக் காப்பாற்ற முடியும்? என்றான்."

இருவர் சொன்னதையும் கேட்டுவிட்டு ரங்கன் "சுப்பைய்யா! உன் மகன் சம்பாதிப்பது அவன் சாப்

-சிவனார் செல்வன்-

பாட்டிற்கே போதாமல் இருக் கிறது. இந்த நிலேயில் ராமைய் யஞல் உன்னே வைத்துக் காப் பாற்ற முடியாது. அவன் சொல் வது சரியே'' என்று தீர்ப்புக்கூறி அவர்களே அனுப்பிஞன்.

ரங்கனுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அவனுக்குப் பசுபதி என்று பெயர் வைத்து அவனே நன்கு வளர்த்து வந்தான்.

ஒருநாள் ரங்கனிடம் சோமன் என்பவன் தன் மகன் முருகனே அழைத்து வந்தான். அவன் ரங்க னிடம் ''ரங்கா! நானே கிழவஞகி விட்டேன். இவன் என் ஒரே மகன். இவனே நான் சீராட்டிப் பாராட்டி வளர்த்தேன். ஆஞல் இவன் கிழவஞகிவிட்ட என்னேத் தன்னேடு வைத்துக் காப்பாற்ற மறுக்கிருன். நான் என்ன செய் வேன்?'' என்ருன்.

அவன் மகன் முருகனே ''என் தந்தை என்னே அருமை பெருமை யாய் வளர்த்தது என்னமோ உண்மை. அது அவர் கடமை. இப் போதோ எனக்குக் கல்யாணமாகி நான்கு குழந்தைகளும் இருக்கிருர் கள். நான் அவர்களேக் காப்பாற் றவே திண்டாடுகிறேன். இந்த நிலேயில் இன்னெருவரை என் னேடு வைத்துக் காப்பாற்ற என்ஞல் முடியாது'' என்ருன்.

ரங்கன் உடனே முருகனிடம் ''நீ உன் தந்தையை உன்னேடு வைத்துக் காப்பாற்ற வேண்டியது உன் கடமை. உன்னே வளர்த்துப் பெரியவஞக்கியவர் அவர். அத ஞல் அந்தக் கடனேத் தீர்க்க நீ



அவரை உன்னோடு வைத்துக் காப்பாற்றவே வேண்டும். இவரையும் உன் குடும்பத்தோடு வைத்துக் கொண்டு சாப்பாட்டில் இவருக்கும் பகிர்ந்து கொடு'' என்று தீர்ப்புக் கூறினன்.

அந்த கிராமத்தில் கிட்டப்பன், சின்னப்பன் என்று இரு வயதான நண்பர்கள் இருந்தார்கள். அவர்கள் ஒருநாள் குளக்கரையில் உட்கார்ந்து கொண்டு ஊர் விவகாரங்களை எல்லாம் அலசிக் கொண்டிருந்தார்கள். கிட்டப்பன் சின்னப்பனிடம் "இப்போதெல்லாம் ரங்கன் சொல்லும் தீர்ப்புகள் ஒன்றுக்கு ஒன்று முரண்பட்டதாக இருப்பதை கவனித்தாயா?'' என்ருன்.

சின்னப்பனும் "உனக்கு திடீரென்று ஏன் இப்படி ஒரு சந்தேகம் ஏற்பட்டது? அவன் அப்படி என்ன அநியாயமாகத் தீர்ப்பைக் கூறினன்?" என்று கேட்டான்.

கிட்டப்பனும் "சுப்பையனும் அவன் மகன் ராமையனும் ரங்கனிடம் தம் வழக்கைக் கூறிய போது தந்தையை மகன் வைத்துக் காப்பாற்ற வேண்டியதில்லை என்று அவன் தீர்ப்புக் கூறினனே. ஆனல் அதே ரங்கன், சோமனும் அவன் மகன் முருகனும் தம் வழக்கைக் கொண்டு போனபோது ஒரு மகனது கடமை அவனது தந்தையைத் தன்னோடு வைத்துக் காப்பாற்றுவது என்று தீர்ப்புக் கூறினனே! இந்த இரண்டு தீர்ப்புகளும் ஒன்றுக்கொன்று முரண்பட்டுத்தானே இருக்கின்றன.'' என்று கேட்டான்.



சின்னப்பனும் சற்று யோசித்து விட்டு "கிட்டப்பா! நீதிபதி எவ்வளவுதான் உயர்ந்த கொள்கையைக் கடைப்பிடிப்பவரானலும் அவரது தீர்ப்பிற்கும் அவரது வாழ்க்கைக்கும் கொஞ்சமாவது தொடர்பு இருக்கத்தான் செய்யும். ரங்கனும் அதற்கு விதிவிலக்கு இல்லையே" என்று கேட்டான்.

கிட்டப்பனும் "நீ என்ன சொல்கிறய்?. எனக்குப் புரியவில்லை. கொஞ்சம் விவரமாகச் சொல்" என்றன். சின்னப்பனும் "ரங்கன் சுப்பைய்யனின் மகன் ராமைய்யனுக்கு அனுகூலமாகத் தீர்ப்பளித்த போது அவனது தந்தை பரமசிவம் உயிரோடு இருந்தார். வயதான அவரை வைத்துக் காப்பாற்றுவது தனக்கு ஒரு சுமை என ரங்கன் கருதினலும் அதை வெளிப்படையாகச் சொல்லவில்லை. அதனல் தான் அவன் ராமைய்யனுக்குச் சாதகமாகத் தீர்ப்பை அளித்தான்" என்றன்.

அப்போது கிட்டப்பன் "சரி, சோமன் தன் மகனேடு வந்தபோது ரங்கன் சோமனுக்குச் சாதகமாக ஏன் தீர்ப்பு கூறினன்?" என்று கேட்டான்.

சின்னப்பனும் "இந்தத் தீர்ப்பு கூறும்போது ரங்கனின் தந்தை இறந்து விட்டார். ரங்கனுக்கு ஒரு மகனும் பிறந்து வளர்ந்து விட்டான். எங்கே தன் மகன் முருகனைப் போல நடந்து விடுவானே எனப் பயந்தே சோமனுக்கு அனுகூலமாகத் தீர்ப்பளித்தான். ராமைய்யனுக்குத் தீர்ப்புக் கூறிய போது ரங்கன் ஒரு மகனின் நிலையில் இருந்தான். சோமனுக்குத் தீர்ப்புக் கூறியபோது ஒரு தந்தையின் நிலையில் இருந்து தீர்ப்புக் கூறினன்" என்றன்.

கிட்டப்பனும் "எல்லாம் தனக்கு வந்தால்தான் ஒருவனுக்கு என்ன கஷ்டம் என்பது புரியும்" என்றன்.






# வலையில் நரி

காட்டை ஒட்டி ஒரு விவசாயி வாழ்ந்து வந்தான். அவன் தன் நிலத்தில் காய்கறிகளைப் பயிர் செய்திருந்தான். இரவு வேளைகளில் ஒரு முயல் வந்து அச்செடிகளைக் கடித்துப் போட்டது. குடியானவன் தன் செடிகளைப் பாழடிக்கும் பிராணியைப் பிடிக்க ஒரு வலை கட்டினான்.

அன்றிரவே அங்கு வந்த முயல் அந்த வலையில் சிக்கியது. அதிலிருந்து அதனால் தப்ப முடியவில்லை. காலையில் தன் நிலத்தைக் காண வந்த விவசாயி வலையில் சிக்கிய முயலைக் கண்டு "ஓகோ! நீதான் செடிகளைப் பாழ்படுத்துபவனா? இன்று அகப்பட்டுக் கொண்டாயா? உன்னை என்ன செய்கிறேன் பார்" எனக்கூறி பிரம்பை எடுத்து வரத் தன் வீட்டிற்குச் சென்றான்.

முயல் வலையிலிருந்து எப்படித் தப்பிச் செல்வது என்று யோசித்துக் கொண்டிருக்கும்போது ஒரு நரி அவ்வழியே வந்தது. அது வலையில் சிக்கிய முயலைப் பார்த்து "ஏன் இப்படி வலைக்குள் மாட்டிக் கொண்டாய்?" என்று கேட்டது.

முயலும் சாதுரியமாக "நான் ஒன்றும் மாட்டிக் கொள்ளவில்லை. நான் அவசர அவசரமாக என் மனைவியின் காய்ச்சலுக்கு மருந்து வாங்கி வர வைத்தியர் வீட்டிற்குப் போய்க் கொண்டிருந்தேன். என்னைப் பார்த்த பசுமாடு தன் வீட்டுக் கல்யாணத்திற்கு நான் வந்திருந்து விருந்து சாப்பிட்டு விட்டுப் போக வேண்டும் என வற்புறுத்திக் கட்டிப் போட்டது. என்னை அழைத்துப் போக ஒரு ஆளை அனுப்புவதாகவும் கூறிவிட்டுப் போயிருக்கிறது. நானோ அவ

-வெ. பரத்-

சரமாக மருந்து வாங்கிக் கொண்டு போக வேண்டும். என்னை இதிலிருந்து விடுவி. நீ கல்யாண சாப்பாட்டைச் சாப்பிட விரும்பினுல் உன்னை நான் இதில் கட்டிப் போட்டு விட்டுப் போகிறேன்'' என்றது.

நரியும் தனக்கு விருந்து சாப்பாடு கிடைக்கப் போகிறதே என மகிழ்ந்து முயலை வலையிலிருந்து விடுவித்தது. விடுபட்ட முயல் நரியை வலைக்குள் சிக்க வைத்து விட்டு சற்று தூரத்திலுள்ள ஒரு புதரில் மறைந்து கொண்டது.

சற்று நேரத்திற்குப்பின் பிரம்போடு வந்த குடியானவன் வலையில் முயலுக்கு பதில் நரி இருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டான். அவன் அந்த நரியைப் பிரம்பால் நன்கு அடித்து விட்டு ''இரு இரு. வேட்டை நாய்களை உன் மீது ஏவி விடுகிறேன். நீ தானே என் கோழிக் குஞ்சுகளை விழுங்கிஞய்?'' என்று கூறியவாறே சென்ருன்.

புதரின் மறைவிலிருந்த முயல் வெளியே வந்து நரியின் அருகே சென்றது. நரியும் முயலைப் பார்த்து ''என்னைச் சட்டென விடுவி. அந்தக் குடியானவன் வருவதற்குள் நான் தப்பி ஓடி விடுகிறேன்'' என்றது.

முயலோ அப்போது விடுவித்தால் நரி தன் மீது பாய்ந்து கொன்று விடும் என நினைத்து ஏதேதோ பேசிக் காலம் தாழ்த்தியது. சற்று நேரத்திற்குப் பின் குடியானவன் வேட்டை நாய்களோடு கொஞ்ச தூரத்தில் வருவதைக் கண்ட பிறகே முயல் நரியை வலையிலிருந்து விடுவித்தது.

நரிக்கு முயல்மீது பாய நேரம் இல்லை. அது தன் உயிர் தப்பினுல் போதும் என்று எண்ணி நாலு கால் பாய்ச்சலில் தப்பி ஓடி விட்டது. முயலும் குடியானவனிடமும் நரியிடமும் அகப்பட்டுக் கொள்ளாமல் தப்பி ஓடி விட்டது.



## திமிங்கல உமிழ்நீர்



திமிங்கலம் நீரை உமிழ்வது இல்லை. அதன் ஒரே மூக்கு துவாரத்திலிருந்து நீராவி வெளியாகிக் குளிர்ந்து அது உமிழ் நீர் போல் தோன்றுகிறது. திமிங்கலம் நீரில் அமிழும்போது அது சுவாசித்த காற்று அதன் காற்றுப் பைகளில் போய் உஷ்ணமாகி ஈரப்பசையுடன் நீர்மட் டத்திற்கு நீராவியாக வந்து உடனே குளிர்ந்து திமிங்கலம் நீரை உமிழ்வது போன்ற தோற்றத்தை அளிக்கிறது.

## போவர் பறவை

ஆஸ்திரேலியாவிலும் நியூகினியிலும் உள்ள ஆண் போவர் பறவை சுள்ளிகளேயும் குச்சிகளேயும் கொண்டு ஒரு பெரிய அலங்கார வளேவுப் பந்தலேப் போட்டு அதில் பல வண்ணப் பொருள்களே வைத்து பெண் போவர் பறவையைக் கவர்ந்து இழுக்கிறது.





## பயங்கரப் பூச்சி

போர்களேயும் விபத்துக்களேயும் ஒதுக்கி விட்டால் மனித மரணத்திற்கு ஐம்பது சதவிகிதத்திற்குக் காரணமாக இருப்பது மலேரியா கொசுதான். கற்காலத்திலிருந்து ஆண்டு ஒன்றுக்கு ஆசியாவிலும் ஆப்பிரிக்காவிலும் இந்த மலேரியா கொசுக்கள் கடிகளால் பத்து லட்சம் பேர்கள் உயிரை இழக்கிருர்கள்.

## போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 50

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1991 மார்ச் மாத இதழில் வெளியிடப்படும்**



R. B. Shinde



R. B. Shinde

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். ★ இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ ஜனவரி 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும். ★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 50/—பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க் கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026**

---

## நவம்பர் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : மறைந்து தாக்கும் கரங்கள்

இரண்டாவது போட்டோ : விரைந்து தாவிடும் கரங்கள்

பரிசு பெற்றவர் : என். சிவகுமார், திருப்பத்தூர் (வ. ஆ. மாவட்டம்)

பரிசுத் தொகை ரூ. 50/-ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பி வைக்கப்படும்.

## அம்புலிமாமா

இந்தியாவில் ஆண்டு சந்தா ரூ. 36–00

சந்தா அனுப்பவேண்டிய முகவரி :

சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை-600026

Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

# காப்பி அடிப்பீர், நட்பு கொள்வீர்!





புள்ளியிட்ட கோட்டினூடே கத்தரிக்கவும்

**ஹாண்டிபாயை** கவனமாக மேலே
கொடுக்கப்பட்டுள்ள சதுர
கட்டங்களில் பார்த்து வரையவும்.
மேலும் மனங்குளிர அவனுக்கு
வண்ணம்தீட்டியும்
மகிழ்ந்திடுங்கள்.




HTA 2888

AMBULIMAMA (Tamil)
Registered as a Newspaper in Sri Lanka
PRICE IN SRI LANKA
Rs. 3.00
January 1991
Regd. No. M. 4863